


# கல்கி

அறு நூறு
காணும்
அருணகிரி

KALKI 10.8.1975 75 காசு

# நீங்களும்
# அணியுங்கள்
# ராஜவஸ்திரங்களை

உங்கள் பணத்துக்கு அதிக மதிப்பைத் தருகிறது

Reshma ரேஷ்மா
2 x 2 புல்வாயில் புடவைகள்

Suchitra சுசித்ரா
கை.பு. வாயில் புடவைகள்

Lavanya லாவண்யா
2 x 2 ருபியா

Pushpanjali புஷ்பாஞ்சலி
கேம்பிரிக் புடவைகள்

ஸ்ரீ தாவணகெரே
காட்டன் மில்ஸ் லிமிடெட்
தாவணகெரே, கர்நாடகம்.

பழைய பரம்பரை
நவீன உருவம்
எடுக்குமிடம்!



THOMAS/DCM/176/Tam.

தேவைகளை சொந்தமாகப் பூர்த்தி
செய்வதை நாங்கள் வலியுறுத்துவது
எஃகுத் தயாரிப்புத் துறையுடன்
மட்டும் நிற்கவில்லை.

ஆதித்யபூரில் உள்ள எங்களது
மாபெரும் பராமரிப்புத் தொழிற் கூடம்
ஒன்றிலேயே நாங்கள் சிக்கலான
மிஷின்களையும் துணை பாகங்களையும்
சொந்தமாக உருவாக்குவதன் மூலம்
இவற்றின் இறக்குமதியைத் தடுத்து
ஆண்டுதோறும் தேசத்திற்காகப்
பெருமதிப்புள்ள அன்னியச்
செலாவணியை மீதப்படுத்துகிறோம்

ஆண்டுகள் பல உருண்டோடினும்,
நாங்கள் இளமை குன்றாது திறம்படச்
செயல்படுவதற்கு இது ஓர் சீரிய
எடுத்துக்காட்டாகும்

தேவைகளை சொந்தமாகப் பூர்த்தி
செய்யும் துறையில் நாங்கள்
வளருகிறோம்.

# எஃகினை
# யொத்த


# உறுதியான
# குறிக்கோள்



**டாடா ஸ்டீல்**

# கல்கி


ராக்ஷஸ ஆடி 25

ஆகஸ்டு 10, 1975














# ஜான்ஸன்ஸ் வழங்குகிறார்கள்
# பல-பயனுள்ள cotton bud



## இதோ அதன் உபயோகங்கள்



மேக்-அப்பை சீராக்குகிறது அல்லது விலக்க உதவுகிறது.



நுட்பமான [illegible] சாதனங்களை சுத்தம் செய்கிறது.



குழந்தையின் மூக்கை சுத்தம் செய்கிறது—நன்கு. மென்மையாக.



சிறிய காயங்களின் மீது மருந்தை ஒற்றி எடுக்க உதவுகிறது.



காதுகளை பத்திரமாக சுத்தம் செய்கிறது-குழந்தையின் காதுகளையும் உங்கள் காதுகளையும்.

ஜான்ஸன்ஸ் Cotton Bud-ஐ இன்னும் எத்தனையோ வழிகளில் நாள்தோறும் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் Cotton Bud இருக்கட்டும்.

**அது சுத்தமானது • பத்திரமானது.**
**சுகாதாரமானது • சௌகரியமானது.**




புதிது!
வளையக்கூடிய
பிளாஸ்டிக் தண்டு

**பத்திரமாக சுத்தம்**
**செய்வீர்- ஜான்ஸன்ஸ்**
**Cotton Bud—ஆல் சுத்தம் செய்வீர்**

*Trademark © J&J 75

OBM 4617 TM

# மலேசியாவைப் பாருங்கள்!

நமது நாடு சுதந்திரம் அடைந்து ஓராண்டுக்குப் பிறகு ஒரு புத்தகத்துக்கு முன்னுரை வழங்கிய ''கல்கி'' தமக்கு இயல்பான நகைச்சுவையோடு எழுதினார் : ''ஒடிந்த குடைக் கம்பி ஒன்று வாங்க வேண்டுமென்றால் அதற்காக முதலில் சர்க்காரிடம் பெர்மிட் வாங்க வேண்டி யிருக்கிறது. அதற்காக மூன்று மந்திரிகளிடமும் ஒன்பது எம். எல். ஏ.க்களிடமும் சிபாரிசுக் கடிதம் வாங்க வேண்டி யிருக்கிறது. இதெல்லாம் முடியாதவர்கள் கறுப்பு மார்க்கெட்டுக்குப் போய்த்தான் உடைந்த குடைக் கம்பி வாங்க வேண்டும்!''

பேனாவைத் திறந்தபோதெல்லாம் ராஜாஜி பர்மிட்—லைசென்ஸ் முறையைக் கண்டித்தார். மேடையேறிய போதெல்லாம் கண்ட்ரோல் முறையினால் ஏற்படும் சங்கிலித் தொடர்பான தீமைகளை விளக்கினார்.

**கல்கி**

**மலர் 35**

**இதழ் 2**



ஜப்பானையும் மேற்கு ஜெர்மனியையும் எவ்வளவோ தடவை மேற்கோள் காட்டியாகி விட்டது. அவ்வளவு தூரம் போவானேன்? பக்கத்திலேயே இருக்கும் மலேசியாவைப் பாருங்கள்! சமீபத்தில் ஸ்டர்லிங் தடுமாறி, டாலரும் கூடச் சற்று ஆட்டம் கண்ட சமயத்திலெல்லாம் மலேசிய டாலர் அசைந்து கொடுக்கவில்லை. இந்தப் பொருளாதார ஸ்திரத் தன்மைக்கு ஏற்ப அந்த அரசின் கொள்கைகள் அமைந்துள்ளன. இதுவும் போதாதென்று மேன் மேலும் அயல்நாட்டவர் மலேசியாவில் முதலீடு செய்ய வேண்டுமென அண்மையில் வேண்டினார் பிரதமர் துன் அப்துல் ரஸாக். அவர் சொன்னார்: ''உங்கள் நாட்டில் நிலவுகிற சீதோஷ்ண நிலைமையை எங்களால் உருவாக்கித் தரமுடியாது. மற்ற எல்லா வசதிகளையும் செய்து தருகிறோம்! உங்கள் மனைவி எதற்கெடுத்தாலும் குற்றம் குறை கண்டுபிடிக்கிறவளாக இருந்தாலும் பாதகமில்லை. மலேசியாவில் அவள் மகிழ்ச்சியோடு இருக்குமாறு கவனித்துக்கொள்கிறோம்!''

மலேசியாவிலேயே கிடைக்கும் மூலப் பொருள்களைக் கொண்டு வேலை வாய்ப்பைப் பெருக்கி ஏற்றுமதியை அதிகரிக்கும் தொழிலகங்களை அமைக்க முன்வருமாறு பிரதமர் அயல் நாட்டுத் தொழிலதிபர்களை வேண்டினார். விவசாயம் சம்பந்தப்பட்ட தொழில்களுக்குச் சிறப்பிடம் மலேசியாவில் உண்டு என்றார்.

''எங்கள் முன்னேற்றத்தில் பங்குதாரர்களாக இருங்கள்'' என அயல் நாட்டுத் தொழிலதிபர்களை அவர் அழைத்தார். அப்படி முன்வருவோரின் முதலீட்டுக்கு ஆபத்து ஏதும் வராது என்று உறுதி அளித்தார். இதற்கு அனுசரணையாக, ''நிர்வாகத்தில் முக்கிய பதவிகளை நீங்களே வகிக்கலாம்'' என்றார். ''சாதாரணமாக இது போன்ற கூட்டு முயற்சிகளில் மலேசிய முதலீடு ஐம்பது சதவீதத்துக்குச் சிறிது அதிகமாக இருக்கும். ஆனால் ஏற்றுமதியை அதிகரிக்கும் தொழிலகமாயிருந்தால் அயல்நாட்டவரின் முதலீடு ஐம்பது சதத்துக்கு அதிகமாயிருந்தாலும் பாதகமில்லை'' என்ற ரஸாக், மேலும் தொடர்ந்தார்:

''எங்கள் பொருளாதாரத்தில் மூடு மந்திரம் ஏதுமில்லை; அது திறந்திருக்கும் ஒன்று. முதலீட்டையும் லாபத்தையும் உள்ளே கொண்டு வரவோ வெளியே எடுத்துப் போகவோ தடை ஏதும் கிடையாது. இத்தகைய சலுகைகள், ஊக்கங்கள் எவ்வளவு காலம் நீடிக்கும் என்று கவலைப்பட வேண்டாம். அரசியல் ரீதியாகவும் இங்கே ஸ்திரமான ஆட்சி உண்டு. தொழிலாளர்கள் தொழிலகத்தில் பங்குதாரர்களாகவும் விளங்கும் கொள்கையை நாங்கள் பின்பற்றுவதால் அவர்களது ஒத்துழைப்பும் உங்களுக்குக் கிடைக்

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

கும். பொருளாதாரச் செழிப்பு நாட்டுக்குக் கிடைப்பது ஒரு லாபம் என்றால் நவீன தொழில் நுணுக்கங்கள் எங்களுக்குப் புரிய வருவது இரண்டாவது லாபம்!''

மலேசியாவும், மேற்கு ஜெர்மனியும், ஜப்பானும் வழி காட்டுகின்றன. ஆனால் வழி காட்டிகள் காட்டும் பாதையில் செல்ல மறுப்பவர்களை யார் என்ன செய்ய முடியும்?

# என்ன சேதி?

## பருவாவின் கொள்கை விளக்கம்

நமது ஆளும் காங்கிரஸ் தலைவர் பருவா சொத்துரிமை இல்லாத ஜனநாயகமே எங்கள் எதிர்கால லட்சியம் என்று கூறியிருக்கிறார்.

இவ்விதம் ஆளும் காங்கிரஸ் கொள்கையை ஐயம்திரிபுக்கு இடமின்றித் தெளிவாக்கி விட்டதற்காக திரு பருவாவுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

## உன்னாலே நான் கெட்டேன் ...!

ஒரு பக்கம் நதிகளில் வெள்ளம் பெருக்கெடுத்து மக்கள் தாங்கவொண்ணாத அவதிப் படுகிறார்கள். மறுபக்கம் நதி நீர் இல்லாமலும் போதாமலும் பல்லாயிரக் கணக்கான ஏக்கர்கள் தரிசாகக் கிடக்கின்றன. இன்னொரு புறம் நதி நீர்ப் பங்கீடு சச்சரவுகள் தீராததால் நதி நீரெல்லாம் கடலில் கலந்து வீணாகிறது. 'உன்னாலே நான் கெட்டேன்; என்னாலே நீ கெட்டே' என்கிற நிலை!

இதற்கெல்லாம் முடிவு கட்டியாக வேண்டும். நதி நீரை விஞ்ஞான ரீதியாகக் கணித்து எந்தெந்த மாநிலங்களில் எந்த அளவுக்கு விவசாயத்துக்குப் பயனாகும் என யதார்த்த ரீதியாக ஆராய்ந்து பார்க்க வேண்டும். அதற்கேற்ப உத்தரவுகள் பிறக்க வேண்டும்.

நர்மதை நீர் நாலரை மிலியன் ஏக்கர் நிலத்தை குஜராத்தில் விவசாயத்துக்குக் கொணர உதவும்; மத்தியப் பிரதேசத்தில் ஆறரை மிலியன் ஏக்கர் தரிசு நிலம் பயிராகும்; ஆனால் மத்தியப் பிரதேசம் தன் பங்குக்கு இது போதாது என்று சொல்லி கோச்லா கமிட்டி முடிவை நிராகரித்துவிட்டது.

பல்லாண்டுகளாகத் தஞ்சைக்குக் கிடைத்து வந்த காவிரி நீரை, ஒப்பந்தம் காலாவதியாகி விட்டது என்று காரணம் காட்டிக் கர்நாடகம் தடுத்து விட்டது. தஞ்சை விவசாயி தவிக்கிறான்.

நெருக்கடி நிலைமைப் பிரகடனத்தினால் நிச்சயமாக ஒரு நன்மை ஏற்பட வாய்ப்பு உண்டு. அதுதான் நதி நீர்ப் பங்கீடு குறித்த சச்சரவுகளுக்கு முற்றுப்புள்ளி வைப்பது. மத்திய அரசு நெருக்கடி நிலை பிரகடனத்தால் தன்னிடம் தற்போது உள்ள அதிகாரங்களைக் கொண்டு ஒரு நிரந்தர, நியாயமான பரிகாரம் காணலாம்.

## ஆலய அதிசயம்!

கோயிலுக்குள் புக நுழைவுக் கட்டணமாம்! சரித்திரம் காணாத புதுமையாக இருக்கிறது. ஆலய நிர்வாகக் கமிட்டிகளில் அரசியல் ரீதியான நியமனங்கள் இதற்கு எத்தனை தூரம் காரணமாக இருந்தனவோ? கோயில் வருமானங்கள் அரசு உத்தரவின் பேரில் வேறு இனங்களில் செலவாவதால்தான் மேலும் வருவாய் தேடிக் கொள்ள புதுமுறை யோசிக்கப்பட்டதா? எது எப்படியானாலும் நல்ல வேளையாக நமது அமைச்சர் எடுத்த எடுப்பிலேயே இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார்.

கோயிலுக்கு வருவாயைப் பெருக்கிக் கொள்ள எண்ணினால் மேன்மேலும் மக்களைக் கோயிலுக்கு வருமாறு செய்ய வழி வகைகளை ஆராய வேண்டும். கதாகாலட்சேபங்கள், பஜனைகள் நடத்தலாம். இதனால் மக்கள் ஈர்க்கப்பட்டு, வரும் ஜனங்கள் தாங்களாகவே மனமுவந்து உண்டியலில் காசு போட்டோ, தீபாராதனை, அர்ச்சனை டிக்கட்டுகள் வாங்கியோ வருவாய் பெருக உதவுவார்கள்.

ராஜாஜி சிந்தனை

### மெய்யான மகிழ்ச்சி

தனது செல்வத்தைத் தானே அனுபவிப்பதில் ஆனந்தம் இல்லை. ஒருவனிடம் உள்ள சொத்துக்களை இயன்றவரை பிறருக்கு உதவுமாறு விநியோகிப்பதில்தான் மகிழ்ச்சி இருக்கிறது. உழைத்துச் சம்பாதிக்க வேண்டும். உலக வாழ்க்கையின் இந்த நியதியிலிருந்து யாரும் தப்ப முடியாது. நீ சம்பாதிப்பதை இயன்றவரை உன்னை நெருங்கி அண்டியிருப்பவர்களுக்கு உதவச் செலவழி. இது தவிர மற்றவர்களுக்கும் தர்மகர்த்தாப் பொறுப்பு ஏற்றுக்கொள். அவர்களிடையில் நீ கூட்டுறவுடன் வாழ்வதால் நீ அடையும் நன்மைகளைக் கொண்டு அவர்களுக்கே உதவு. மாடுகளையும் கடிவாளம் பூட்டிய குதிரைகளையும் வேலை வாங்குவது போல் யாரையும் கட்டாயப் படுத்தி வேலை வாங்க முடியாது. சுதந்திரமாகவும் சுயேச்சையாகவும் அனைவரும் உழைக்க முன்வர வேண்டும். இந்த உழைப்பு நிரம்பக் கிடைக்கவும் வேண்டும். தேசிய வாழ்க்கைச் சூழலே இவ்விதம் மாறவேண்டும். இதில்தான் இருக்கிறது தேசத்தின் முன்னேற்றமும் மக்களின் மகிழ்ச்சியும்.

சுயராஜ்யா, ஜூலை 27, 1963

உனக்கு ட்ரு பிடிக்குமா?

யாருக்குதான் பிடிக்காது?

ட்ரு மாரி. எந்நேரமும் சுவைக்கச் சிறந்த பிஸ்கட்.

தேநீர், காபி அல்லது எந்த பானத்துடனும் சுவைத்திட மொறுமொறுப்பான பிஸ்கட். உங்கள் குடும்பத்தினருடன் பகிர்ந்து மகிழ சிறப்பான சுவை.

இந்தியாவில் நவீனமான தொழிலகத்தில் சுகாதார முறைபடி தரமாக தயாரிக்கப்படுபவை.

ட்ரு பிஸ்கட்டுகள் மொறுமொறுப்பானவை. புதுமணம் குன்றாமல் ருசி மிக்கவை.




TRUE

ட்ரு

-பகிர்ந்திட விரும்பும் தரமிகுசுவை



HT-AFP-8021

ஆரோபுட் பிரைவேட் லிமிடெட், ஆரோவில் — பாண்டிச்சேரி

# முருகப்பெருமான்

22

ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசார்ய சுவாமிகள்

**ஸ**னத்குமாரர்தான் ஸ்கந்தர் என்று சாந்தோக்ய உபநிஷத்திலும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. அதில் அவரே ஞான பண்டிதர் என்பதும் தெளிவாகத் தெரிகிறது. அறுவைப்பட்ட நாரத மகரிஷி ஸனத்குமாரரிடம் ஞானோபதேசத்துக்காக வருகிறார். ''சகல வேதங்களையும், இதிஹாச புராணங்கள், சகல சாஸ்திரங்கள், தேவ வித்யை, பிரம்ம வித்யை, பூதவித்யை, நட்சத்திர வித்யை என்று ஒன்று பாக்கியில்லாமல் எல்லா விஷயங்களையும் கரைத்துக் குடித்து விட்டேன். ஆனால் இதையெல்லாம் வெளி சமாசாரங்கள், மந்திரங்களைத்தான் தெரிந்து கொண்டேனேயொழியத் **தன்னைத்** தெரிந்து கொள்ளவேயில்லை. ஆத்மாவை அறியாததால் துக்கத்தில்தான் இருக்கிறேன். நீங்கள்தான் என்னைத் தூக்கி அக்கரை சேர்க்க வேண்டும்'' என்று நாரதர் ஸனத்குமாரரிடம் பிரார்த்திக்கிறார். அவருக்கு ஸனத்குமாரர், 'ஆத்மா எங்கேயோ இருக்கிறது என்று தேடிப் போக வேண்டியதில்லை. கீழும் மேலும், பின்னும் முன்னும், வலது பக்கமும் இடது பக்கமும் எல்லாம் ஒரே ஆத்மாதான். அதைப் பற்றியே ஒருத்தன் தியானித்துத் தியானித்து அதுவாகவே ஆகிவிட்டால் அப்புறம் அவன் அதிலேயே எப்போதும் விளையாடிக் கொண்டிருக்கிறான். உண்மையான ஸ்வராஜ்யம் தன்னைத் தானே ஆண்டுகொள்கிற இந்த நிலைதான். இவன்தான் 'ஸ்வராட்'—உண்மையான சக்கரவர்த்தி. இந்த உத்தம நிலையை அடைய முதலில் ஆகார சுத்தியில் ஆரம்பிக்க வேண்டும், பிறகு படிப்படியாக சித்த சுத்தி உண்டாகி, மனசு நன்றாகத் தியானத்தில் நிலைத்து நின்று, எல்லாக் கட்டுக்களும் தெறித்து விழுந்து, ஆத்ம ஸ்வரூபமாகவே இருப்பான்' என்று வழிகாட்டினார். 'இப்படியாக **பகவான்** ஸனத்குமாரர் இருள் கடந்த நிலையைக் காட்டினார். அவருக்குத்தான் ஸ்கந்தன் என்று பேர், அவருக்குத்தான் ஸ்கந்தன் என்று பேர்' என்று உபநிஷத்து இரண்டு தடவை முத்தாய்ப்பு வைக்கிறது.

இருள் கடந்த ஒளி, ஞானாக்னி முருகன்தான். அதைத்தான் சாந்தோக்யம் சொல்கிறது.

சாந்தோக்ய அவஸ்தா ('அவஸ்தா' என்றால் 'நிலை') தான் ஜெண்டவஸ்தா (Zend Avesta) என்ற பார்ஸி மதக் கிரந்தத் தொகுப்பாயிருக்கிறது. பார்ஸி மதம் முழுக்க முழுக்க அக்னி வழிபாடுதான். ஸௌராஷ்டிர தேசக்காரர் ஒருத்தர் அதை ஸ்தாபித்தவர். 'ஸௌராஷ்டிரர்' என்பதே 'ஜொரொதஸ்த்ரர்' (Zororhustra) என்றாகி யிருக்கிறது. 'ஸௌரம்' என்றால் சூரிய சம்பந்தமானது. சூரியன், அக்னி, காயத்ரி மூன்றும் சம்புவின் விசேஷ ரூபங்கள் என்று ஆசார்யாள் 'பிரச்னோத்தர ரத்ன மாலிகை'யில் சொல்கிறார். திருவண்ணாமலையில் அக்னி ஸ்வரூபமாகவே ஈச்வரன் இருக்கிறார். சிவாக்னிதான் ஸுப்ரமணியர்.

மலையாளத்தில் தீபத்தில் அம்பாளை ஆராதித்து, 'பகவதி சேவை' என்கிறார்கள். ஜ்வலிக்கிற ஞானாக்னியான வேலாயுதத்தை 'சக்தி சக்தி' என்றே சொல்கிறோம்.

வேதமே முக்கியமாக அக்னி வழிபாட்டு மதம்தான். 'அக்னி' என்ற வார்த்தையோடுதான் வேதம் ஆரம்பிக்கிறது. அக்னி காரியமே 'ஔபாசனம்' என்பது. 'உபாசனை'க்கு இடமாவது 'ஔபாசனம்'. உபாசனையென்றாலே அக்னி காரியம்தான் என்றாகிவிட்டது. ஔபாசனை நான்கு வர்ணத்தவருக்குமே உண்டானது.

முக்கியமான உபாசனையான அக்னி காரியத்துக்கு ஸுப்ரமணியர் அதிதேவதையாக இருப்பதால்தான், அவரை விட்டுவிட்டுப் 'பஞ்சாயதன பூஜை' என்பதில் பிள்ளையார், சூரியன், மகாவிஷ்ணு, அம்பாள், ஈச்வரன் ஆகிய ஐவரை மாத்திரம் ஆராதிக்கச் சொல்வதாகத் தோன்றுகிறது. முருகன் நம் மதஸ்தரால் நிச்சயம் ஆராதிக்கப்பட வேண்டியவர் என்பது, பஞ்சாயதனத்தை மறுபடியும் உயிர்ப்பித்த அதே பகவத்பாதாள் ஸ்தாபித்த ''ஷண்மத''ங்களில் முருக வழிபாடான 'கௌமார'மும் ஒன்று என்பதிலிருந்து உறுதியாகிறது. இப்போது அக்னி காரியம் குறைந்து மூர்த்தி பூஜை அதிகமாகியிருக்கிறது. ஸுப்ரம்மண்ய சம்பந்தமான புராணங்கள், ஸ்தோத்திரங்கள், திருப்புகழ் ஆகியன நிறையப் பிரசாரமாகி, பழனி, திருச்செந்தூர், திருத்தணி முதலான க்ஷேத்திரங்களின் உத்ஸவாதிகள் ஜனங்களை ரொம்பவும் வசீகரித்து வருகின்றன. ஆனதால் பஞ்சாயதன பூஜையிலும் ஸுப்ரம்மண்யரைச் சேர்த்துக்கொண்டுவிடுவது உத்தமமாகும்.

ஆசார்யாள் திருச்செந்தூரில் கடலோரத்தில் விளங்கும் ஷண்முகநாதரைப் பார்த்து, ''பராசக்தி புத்திரனே! 'சமுத்திரக் கரையில் நிற்கிற நான் சம்சார சமுத்திரத்தின் அக்கரைக்குப் பக்தர்களைக் கடத்துவிக்கிறேன். அலைகளெல்லாம் சமுத்திரத்தில் மடங்கி விழுந்து ஒடுங்கி விடுவதைப் போல் என் சந்நிதிக்கு வருகிறவர்களின் ஆபத்துக்கள் கஷ்டங்கள் எல்லாம் ஒடுங்கியே போகும்' என்பதைக் காட்டுகிறாய்'' என்று 'ஸுப்ரம்மண்ய புஜங்கம்' பாடியிருக்கிறார். ''குகனைத் தவிர இன்னொரு தெய்வம் எனக்குத் தெரியவில்லை, தெரியவே இல்லை'' (ந ஜானே ந ஜானே) என்கிறார்.

'கடலிலே அலைகள் எழும்பி அதிலேயே லயிக்கிற மாதிரி, சகல ஜீவ ஜகத்தும் பரம சத்தியமான என்னிடம்தான் தோன்றி என்னிடமே முடிகின்றன' என்ற ஞானோபதேசத்தைத் திருச்செந்தூர் முருகன் சொல்லாமல் சொல்கிறார். நாரதருக்கு ஞானோபதேசம் செய்த ஸனத்குமாரரிடம் ஈச்வரனே தமைந்து வரம் கேட்டு, ஞான ஸ்கந்தனாக அவரைப் பெற்று, மறுபடியும் அவரிடம் தமைந்து ஞானோபதேசம் (பிரணவ உபதேசம்) வாங்கிக் கொண்டார். (தொடரும்)

---

**1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.**

# கலைதான் தெய்வம், கலைதான் மூச்சு!

## நான் வணங்கும் மனித தெய்வம்-2



எனது குருநாதர் மகாவித்வான் தஞ்சாவூர் ஸ்ரீ வைத்தியநாத அய்யர் சீலமும், பரோபகார சிந்தனையும், பரந்த மனப்பான்மையும், நல்லோரிடத்திலும் மிக்க அன்பும் உடையவர். இவரிடம் நான் பயின்றதை மிகப் பெரிய அதிர்ஷ்டமாகவும், பாக்கியமாகவும் கருதுகிறேன்.

நான் மிருதங்கம் பயின்றுகொண்டே தஞ்சாவூர் கல்யாணசுந்தரம் உயர்நிலைப்பள்ளியில் எட்டாவது வகுப்பில் படித்துக் கொண்டும் இருந்தேன். எனது குருநாதர் பக்கவாத நோயினால் பாதிக்கப்பட்டு இருந்த போதிலும் அதை லட்சியம் செய்யாமல் மிருதங்க பாடங்கள் போதிப்பார். அப்பொழுது எனது நண்பர்களான ஸ்ரீ வி. நாகராஜன், ஸ்ரீ பாலகிருஷ்ணன், இன்னும் சிலர் சிஷ்யர்கள். குருநாதர் அவர்களுக்குக் குழந்தை இல்லாததால் முடிந்தவரை சிஷ்யர்களை வீட்டோடு வைத்துக் கொண்டு, தம் மைந்தர்கள் போல் நடத்துவார். அப்பொழுது கடுமையான ரேஷன் காலமாக இருந்ததால், நான் தனிப்பட்ட முறையில் எனது பாட்டியார்கூட இருக்க நேரிட்டது. ''இவன் தனியாக ஜாகை வைத்துக் கொண்டு இருக்கிறானே, நம் வீட்டில் இவனை வைத்துக் கொள்ள முடியவில்லையே?'' எனப் பல நாட்கள் என் குருநாதர் வருத்தப்பட்டதுண்டு. பள்ளிப் பாடங்கள் ஒரு பக்கம்; மிருதங்கப் பாடங்கள் இன்னொரு பக்கம். இரண்டிலும் சோடை போகக் கூடாது.

தாம் சொல்லிக் கொடுத்த பாடத்தை மறுநாள் அவருடைய திருப்திக்கு வாசித்துக் காண்பித்து விட்டால் என் குருநாதருக்கு ஏற்படும் சந்தோஷத்துக்கு அளவே கிடையாது. தினமும் குழந்தைகள் (அதாவது சிஷ்யர்கள்) வந்தவுடன் புதிதாகப் பாடங்கள் சொல்லிக் கொடுக்க வேண்டுமே என முதல் நாள் ராத்திரி முழுதும் யோசித்து வைத்துக் கொண்டு இருப்பார். ஒரு சமயம் கும்பகோணம் வந்திருந்த போது எங்களது இல்லத்துக்கு விஜயம் செய்தார் குருநாதர். ''இன்று இங்கு தங்கி விட்டு நாளைக்காலையில் தஞ்சாவூருக்குப் புறப்பட்டு போகலாமே?'' என எனது தந்தை அவரிடம் கேட்டுக் கொண்டார். ''நாளைக் காலையில் குழந்தைகள் வந்து காத்துக் கொண்டிருப்பார்கள்; நான் போகாவிட்டால் பாடங்கள் நடக்காது; அவர்களுக்கும் நான் வரவில்லையே என கவலை உண்டாகும்; அடுத்த சந்தர்ப்பத்தில் அவசியம் தங்குகிறேன்'' எனக் கூறி உடன் தஞ்சாவூருக்குக் கிளம்பி விட்டார்.

கலைதான் தெய்வம்; கலைதான் மூச்சு என் குருநாதருக்கு. வேறு ஓர் ஆசிரியரிடம் பயின்ற மாணவன் மிக்க நன்றாக மிருதங்கம் வாசித்தால் அவனை உடன் கூப்பிட்டுத் தட்டிக் கொடுத்து ஆசிர்வாதம் பண்ணி, ''நீ ரொம்ப நன்றாக வாசித்தாய். சில மோகராக்கள் கோர்வைகள் நான் உனக்குச் சொல்லித் தருகிறேன், நன்றாகச் சாதகம் பண்ணி, பிரமாதமாக வாசி!'' என்று சொல்லி உற்சாகப் படுத்தி ஆசி கூறுவார்.

இன்றைய மிருதங்க உலகில் ஒரு புதிய சகாப்தத்தை உண்டாக்கியவர் இந்த வள்ளல். ''தஞ்சாவூர் வைத்யநாதய்யர் பாணி'' என்று சொல்லும்அளவுக்குஅந்த பாணியை உருவாக்கியவர். அவருடைய சிஷ்யர்கள் கணக்கில் அடங்கா. அவருடைய ஆசிகளால் எல்லா சிஷ்யர்களும் சௌக்கியமாக இருக்கிறார்கள். தமக்கு வாசிக்க வரும் சந்தர்ப்பங்களைக் கூடத் தம் சிஷ்யர்களை விட்டு வாசிக்கச் சொல்லுவார்; சில சமயங்களில் கூட இருந்து ரசித்து உற்சாகப்படுத்துவார்.

வர்ணங்களுக்கு வாசிக்கும் முறை, பஞ்சரத்ன கீர்த்தனங்களுக்கு வாசிக்கும் அமைப்பு, கிருதிகளுக்கு வாசிக்கும் முறைகள், தனியாவர்த்தனம் வாசிக்கும் முறை, விதிகள் எல்லாவற்றையும் சொல்லியும், வாசித்தும் காண்பிப்பார். ஒரு பாடகரைப் பாடச் சொல்லித் தாமும் வாசித்துக் காண்பித்து, சிஷ்யர்களை

வாசிக்கச் சொல்லுவார். நான் குருகுல வாசம் செய்த போது தஞ்சாவூர் ஸ்ரீ எல். வெங்கடேச அய்யங்காரை ஏற்பாடு செய்து எங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்.

அன்று தமிழ் வருடப் புத்தாண்டு நாள். வழக்கம்போல் அன்றும் காலையில் பாடத்துக்குச் சென்றேன். அப்பொழுது குருநாதருக்கு உடல் நிலை அவ்வளவு சரியில்லை. இலேசாக மார்வலியும் இருந்தது.

''மாமா! உடம்புதான் சரியாக இல்லையே; நாளைக்குப் பாடங்கள் சொல்லித் தரலாமே'' எனக் கூறினேன். ''இன்று புது வருடம் ஆரம்பம். உடம்பு இருக்கட்டும், மிருதங்கத்தை எடுத்துக் கொள்ளுங்கள், புதிய பாடங்களைத் தொடங்குவோம்'' என்றார் குருநாதர். உடம்பு சரியில்லா நிலையிலும், தம்மை மறந்து பாடங்களைச் சொல்லிக் கொடுத்தார், அந்தப் பிரபு. அன்றைய சாயந்திரப் பாடங்களுக்கு வரும்பொழுது.... அவர் இல்லை. அமரராகி விட்டார். பசுமரத்து ஆணி போல் இந்த நிகழ்ச்சி எனது உள்ளத்தில் இருக்கிறது. இது நடந்தபொழுது எனக்கு வயது பன்னிரண்டு. அவர் காலமான பிறகு சில வருடங்கள் என் குருநாதர் திதியின்போது கும்பகோணத்திலிருந்து தஞ்சாவூருக்குச் செல்வேன். ஒரு வருடம் அவருடைய திதியின்போது நான் அங்கு இருந்தேன். அவர்கள் எதிர்பார்த்த உறவினர் அந்தச் சடங்குகள் செய்ய வர மிக்க தாமதம் ஏற்பட்டது. எனது குருநாதரின் பத்னியும் புரோகிதரும் இவ்வகையாக மொழிந்தனர்: ''சிஷ்யனுக்குப் பிள்ளையின் ஸ்தானம் உண்டு. ஆகவே இவன் இக்காரியத்தை செய்யட்டும்.'' அவர்கள் ஆணையிட்டபடி அன்று நான் அச்சடங்குகளைச் செய்தேன். என் குருவுக்கு அச்சமயத்தில் செய்த கடமையை நான் என் வாழ்க்கையில் மிகப் பெரிய பாக்கியமாகக் கருதுகிறேன்.

சங்கீதம் உள்ளளவும் என் குருநாதருடைய பெயர், புகழ், அவர் இயற்றிய பாணி நிலைத்திருக்கும். இப்பேர்ப்பட்ட உயர்ந்த குணங்களை உடைய என் குருநாதரை நான் மனித தெய்வமாக வழிபடுகிறேன்.

— உமையாள்புரம் கா. சிவராமன்

# விளையாட்டுப் பித்தர்கள்

சிரிப்பலைகள் என்றால் எப்படி இருக்கும்?

இதை உணர வேண்டும் என்றால், ''தி கிரேஸி பாய்ஸ் ஆப் தி கேம்ஸ்'' என்ற படத்தைப் பார்க்க வேண்டும்.

ஒரு சிரிப்பு அடங்குவதற்குள் இன்னொரு சிரிப்பு; அது அடங்குவதற்குள் மற்றொன்று என்று நீண்டு கொண்டே போகும். கடலலை போல் சிரிப்பலைக்கும் முடிவே இராது.

இத்தனைக்கும் கதை இல்லாக் கதை ஒன்றை விளையாட்டாகவே விளையாட்டுப் படமாக எடுத்திருக்கிறார்கள்.

திரையுலகில் புதுமை; இதுவரை யாரும் கண்டும் கேட்டுமிராத புதுமை என்று பறை சாற்றும் நம் திரைப்படத் தயாரிப்பாளர்கள் இந்தப் படத்தைப் பார்த்தால், ரசிகர்களுடன் சேர்ந்து 'இதுவல்லவோ புதுமை!' என்று வியந்து மூக்கின் மேல் விரலை வைப்பார்கள்.

இப்படி ஒரு படத்துக்காகத் தயாரிப்பாளர்கள் கதைக்கு அலையவில்லை; நடிகர்கள் உணர்ச்சிக்காக அலையவில்லை. எல்லாம் எல்லோருக்கும் இயல்பாகவே கிடைத்து விடுகின்றன. அதனால்தான், ரசிகர்களும் சிரிப்பைத் தேடி அலைய வேண்டிய தேரவில்லை. சிரிப்பே அவர்களைத் தேடி வந்து அரவணைத்துக் கொள்ளுகிறது. இன்றைய நிலையிலிருக்கும் மனச் சுமையை இறக்கி வைத்து இயல்பான நகைச்சுவைக்கு இலக்கணம் வகுத்துக் காட்டி மகிழ்விக்கிறது. விளையாட்டுப் பித்தர்கள் ரசிகர்களைச் சிரிப்புப் பித்தர்களாக்கித் தாங்களும் சிரித்து மகிழ்கிறார்கள்.

-அக்ஷயம்



# மழை நிபுணர்!

அமெரிக்காவிலிருந்து செயற்கை மழை பொழியச் செய்யும் நிபுணர்கள் சென்னைக்கு வந்துள்ளனர். தமிழ் நாடு அரசு விவசாயத் துறை இம்முயற்சிக்கான உதவிகளை நல்கி வருகிறது.

இத்திட்டத்தின் பிரதம என்ஜினியர் திரு ஃப்ரெட் இ. கிளார்க் செயற்கை மழை பற்றிக் கூறுகிறார்: ''நீருண்ட மேகங்கள் ஏரிப் பகுதியில் குவியும்போதுதான் செயற்கை முறையில் மழை பொழியச் செய்யும் வேலையைத் தொடங்குகிறோம். அத்தகைய மேகங்கள் திரள்கின்றனவா என்பதை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் உள்ள ராடார் சாதனத்தின் மூலம் தெரிந்து கொள்ள இயலும். சென்னையில் மாலையிலும் முன்னிரவு நேரங்களிலும்தான் நீருண்ட மேகங்கள் திரள்கின்றன. அத்தகைய சாதகமான சூழ்நிலை அமையும் பொழுதுதான் பைலட் திரு நாரிஸ் வெவர்கா விமானத்தில் ஏறிச் சென்று செயற்கை மழைக்கான வேலையில் ஈடுபடுகிறார்.''

''செயற்கை மழை பொழிய விமானி திரு நாரிஸ் செயல்படும் முறையைச் சற்றுத் தெளிவாக எடுத்துச் சொல்ல முடியுமா?''

''திரு நாரிஸ் இதற்குப் பயன்படுத்துவது ஓர் இரட்டை என்ஜின் விமானம். இதோ, இந்த 'ஸ்மோக் காண்டில்கள்' (Smoke Candles) விமானத்தின் இறக்கைக்குப் பின்புறம் பொருத்தப்பட்டிருக்கும். ஊதுபத்தி புகை கிற மாதிரி இதிலுள்ள ஸில்வர் அயோடைட், புகை அல்லது ஆவியை வெளிப்படுத்தும்'' என்று கூறிப் புல்லாங்குழல் போன்ற கறுப்புக் குழல்களை எடுத்துக் காண்பித்து அதில் ஸில்வர் அயோடைட் கெட்டிக்கப்பட்டுள்ளதையும் சுட்டிக் காட்டுகிறார், என்ஜினியர் ஃப்ரெட் கிளார்க்.

''இக் குழல்களில் உள்ள ஸில்வர் அயோடைட் தீப்பற்றிக் கொள்ள மின்சாரத்தை உபயோகிக்கிறோம். இது எரிந்து ஆவி வெளிப்பட்டு மேகத்ினூடே பரவும். இயற்கையான மழை பொழியவும் மேகம் குளிர்ச்சியடைய வேண்டும். அதற்கு வானத்திலுள்ள தூசு—பனித் துகள்கள் உதவுகின்றன. அதேபோல் செயற்கை மழைக்கு ஸில்வர் அயோடைட் ஆவி பயன்படுகிறது.''

''இந்த முயற்சிக்குச் செலவு கூடுதலாக ஆகிறது அல்லவா?''

''செலவு ஆகத்தான் செய்யும். ஆனால் பலன் இல்லாமல் போகவில்லையே? இம்முறையைக் கையாண்டு ஏரிப் பகுதியில் ஓரளவு மழை பெய்யச் செய்திருக்கிறோம். அந்த அளவுக்கு வெற்றிதான். மழை முகில்கள் மிகுதியாக இருந்தால் எங்கள் முயற்சியும் நல்ல பலன் அளிக்கும்.''

''விமானி எவ்வளவு உயரத்தில் பறப்பார்?''

''சுமார் 15000 அடி உயரத்தில் பறப்பார். தரை மட்டத்திலிருந்து சுமார் 6000 அடி உயரத்தில் மேகத்தின் கீழ்ப் பகுதி இருந்தால் அதற்கும் மேலே மேகத்தின் மையப் பகுதியில் ஸில்வர் அயோடைட் ஆவியைத் தூவுவார் விமானி. இதனை (Seeding the Cloud) என்போம்.''

''விமானிக்கு நீங்கள் கீழே இருந்தவாறு யோசனைகள் கூறுவதுண்டா?''

''மிஸ்டர் நாரிஸ் இத்துறையில் சிறந்த நிபுணர். மிக்க அனுபவம் உள்ளவர். எனினும் மழை பொழிய வேண்டிய இடத்தைப் பற்றி அவ்வப்போது நான் யோசனை கூறுவேன். தேவையில்லாத இடத்தில் பெய்து வீணாகிவிடக் கூடாதல்லவா?''

''நீங்கள் அமெரிக்க அரசாங்கத்தின் ஆதரவில் செயல்படுகிறீர்களா?''

''இல்லை. 'அட்மாஸ்ஃபெரிக்ஸ் இன்கார்ப்பொரேடெட்' என்ற கலிஃபோர்னியாவில் உள்ள தனியார் நிறுவனம் இது. நான் அதன் பிரதம என்ஜினியர். கலிஃபோர்னியாவில் நான் எலெக்ட்ரானிக்ஸ் என்ஜினியரிங் பயின்ற பிறகு 1956 முதல் இம்முயற்சியில் ஈடுபடலானேன். ஆனால் இத்துறையில் 1946 முதலே ஆராய்ச்சிகள் தொடங்கி நடைபெற்று வந்துள்ளன. இன்றும் தீவிர ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன. 'கிங்ஸ் ரிவர்' (கலிபோர்னியா) பகுதியில் நான் இத் துறையில் மேற்கொண்ட முயற்சி நல்ல பலனளித்துள்ளது'' என்கிறார் திரு கிளார்க்.

''உலகில் வேறு எந்த எந்த நாடுகளில் இம்முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது?''

''தென் ஆப்பிரிக்கா, கிழக்கு ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, ருஷ்யா...'' என்று அடுக்கிக் கொண்டே போகிறார் திரு கிளார்க்.

சென்னையிலும், கோயமுத்தூரிலுமாக, மொத்தம் நாலு மாத காலம் இந்த நிபுணர் குழுவினர் செயற்கை மழை முயற்சிகளை நிகழ்த்தத் திட்டமிட்டுள்ளனர். திரு கிளார்க் தமது குடும்பத்துடன் வந்துள்ளார்.

பேட்டி: 'பாணன்'

# காயங்கள் வெவ்வேறு உருவங்களிலும் அளவுகளிலும் ஏற்படுகின்றன.

# ஆகையால் அவற்றுக்கேற்ப வருகின்றன, புதிய பாண்டு-எய்ட்* பிராண்ட் டிரஸ்ஸிங்குகள்.






காயங்களால் தொற்று நோய் பரவக்கூடும். எனவே, புதிய பாண்டு-எய்ட் * டிரஸ்ஸிங் பயன்படுத்தி, அவற்றைப் பாதுகாருங்கள். இப்போது அவை வெவ்வேறு உருவங்களிலும் அளவுகளிலும் கிடைக்கின்றன 5 எண்ணிக்கை கொண்ட ஸ்ட்ரிப்புகளில் வசதியாக வருகின்றன.

பாண்டு-எய்ட் * டிரஸ்ஸிங்கைப் பயன்படுத்தி முன் ஜாக்கிரதையுடன் இருங்கள். எப்பொழுதும் சில டிரஸ்ஸிங்குகள் கைவசமிருக்கட்டும்.




Johnson & Johnson

# சிவகாமியின் சபதம்

அமரர் **கல்கி**

## இருபத்தாறும் அத்தியாயம்

## நீலகேசி உதயம்

குண்டோதரன் வந்து விட்டுப் போனதிலிருந்து சிவகாமியின் சித்தக் கடலில் கொந்தளிப்பு அதிகமாயிற்று. மலைபோன்ற எண்ண அலைகள் எழுந்து விழுந்து நாற்புறமும் மோதிப் பாய்ந்து அல்லோல கல்லோலம் செய்தன.

பொழுது போவது மிகவும் சிரமமாகி, ஒவ்வொரு கணமும் ஒரு முடிவில்லாத யுகமாகத் தோன்றியது.

குண்டோதரன் கூறிய வார்த்தைகள் ஒவ்வொன்றையும் திரும்பத் திரும்ப நினைவுக்குக் கொண்டு வந்தாள். அவனிடம் நாம் உசிதமான முறையில் பேசினோமோ இல்லையோ என்ற சந்தேகம் அடிக்கடி தோன்றியது. மாமல்லரிடம் போய் அவன் என்ன சொல்கிறானோ என்னவோ என்ற கவலையும் அடிக்கடி ஏற்பட்டது.

மாமல்லர் வரப் போவது பற்றிய இரகசியத்தை வெளியிட்டுவிட வேண்டாம் என்று குண்டோதரன் தனக்கு

எச்சரிக்கை செய்ததைப் பற்றி நினைத்துக் கொண்ட போது மட்டும் சிவகாமியின் சோகம் குடிகொண்ட வதனத்தில் புன்னகை தோன்றிற்று.

ஆயினும், அந்த எச்சரிக்கை எவ்வளவு அவசியமானது என்பது வெகு சீக்கிரத்திலேயே அவளுக்குத் தெரிய வந்தது.

குண்டோதரன் வந்து சென்ற மூன்றாம் நாள் வாதாபி நகரம் அடாவில்லாத அல்லோலகல்லோலத்துக்கு உள்ளாகியிருந்தது. அன்றைய தினம் புலிகேசிச் சக்கரவர்த்தி அஜந்தா கலை விழாவுக்காகப் பயணமாகிறார் என்பதும், பக்கத்தில் உள்ள இராஜ வீதி வழியாக அவருடைய ஊர்வலம் போகும் என்பதும் சிவகாமிக்குத் தெரிந்திருந்தது. தன் வீட்டின் பலகணியின் வழியாகவே மேற்படி ஊர்வலக் காட்சியைக் காணலாம் என்று அவள் அறிந்திருந்தாள்.



கடைசியாக, பிற்பகலில் மூன்றாவது ஜாமத்தில் சக்கரவர்த்தியின் பிரயாண ஊர்வலம் வந்தது.

பட்டத்து யானை மீது புலிகேசிச் சக்கரவர்த்தி கம்பீரமாக வீற்றிருந்தார். அவருக்குப் பின்னால் சிவிகைகளில் நாகநந்தி பிக்ஷுவும் சீன யாத்திரிகரும் சென்றார்கள்.

அழகிய தங்க ரதத்தில் சக்கரவர்த்தியின் இளம் புதல்வர்கள் மூவரும் அமர்ந்திருந்தார்கள். இன்னும், சக்கரவர்த்தி முன்னும் பின்னும் சாம்ராஜ்யத்தின் பிரதான அமாத்தியர்கள், மந்திரிமார்கள், சாமந்தர்கள், சேனா நாயகர்கள் முதலியோர் பலவித வாகனங்களில் பெருமிதத்துடன் அமர்ந்து சென்றார்கள்.

பொதுஜனங்களின் கோலாகல கோஷங்களோடு வாத்திய முழக்கங்களும் சேர்ந்து காது செவிடுபடும்படி செய்தன.

இதையெல்லாம் பார்த்த சிவகாமிக்குக் காஞ்சியில் மகேந்திர பல்லவர் மாமல்லபுரத்துக் கலை விழாவுக்குக் கிளம்பும் காட்சி நினைவுக்கு வந்தது. ஆகா ! முன்னொரு காலத்தில் இந்தப் புலிகேசி எத்தகைய கலை உணர்வே இல்லாத மூர்க்கனாயிருந்தான்! இப்போது எப்பேர்ப்பட்ட மாறுதல் ஏற்பட்டுவிட்டது ? இதற்கெல்லாம் என்ன காரணம் ? — காஞ்சியைப் பார்த்துவிட்டு வந்ததுதானே ?

அந்த ஊர்வலக் காட்சியைப் பற்றிப் பிறகு நினைத்தபோதெல்லாம் சிவகாமிக்கு எரிச்சல் உண்டாயிற்று. 'இந்தப் புலிகேசியின் ஆடம்பரமும் இறுமாப்பும் கூடிய சீக்கிரத்தில் அடங்கப் போகின்றன அல்லவா ?' என்பதை எண்ணியபோது ஓரளவு ஆறுதல் உண்டாயிற்று.

இவர்கள் அஜந்தாவிலிருந்து திரும்பி வருவதற்குள்ளே மாமல்லர் இங்கு வந்துவிடக் கூடுமல்லவா ? அதை அறிந்தவுடனே இவர்களுக்கெல்லாம் எத்தகைய திகில் உண்டாகும்!

''யுத்தம் வேண்டாம்'' என்று தான் குண்டோதரனிடம் சொன்னது தவறு என்று சிவகாமிக்கு அப்போது தோன்றியது. அவளுடைய ஆத்திரத்தை அதிகப்படுத்த இன்னொரு காரணமும் சேர்ந்தது.

பட்டத்து யானைக்குப் பின்னால் சிவிகையில் சென்ற பிக்ஷு சிவகாமி இருந்த வீட்டின் பக்கம் ஒரு கணம் முகத்தைத் திருப்பிப் பார்த்ததாகத் தோன்றியது. ஆனாலும், நாகநந்தி பிரயாணம் கிளம்புவதற்கு முன்னால் தன்னிடம் மறுபடியும் வந்து விடைபெறுவார் என்று அவள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. 'ஆ! இந்தக் கள்ள பிக்ஷுவுக்கு இவ்வளவு அகங்காரமா?' என்று எண்ணி ஆத்திரத்தை வளர்த்துக் கொண்டிருந்தாள்.

எனவே, அன்று மாலை இருட்டுகிற சமயத்தில் நாகநந்தி அவள் வீட்டு வாசலில் குதிரை மீது வந்து இறங்கி உள்ளேயும் பிரவேசித்து வந்தபோது சிவகாமி எல்லையற்ற வியப்பு அடைந்தவளாய், ''சுவாமி! இதென்ன! தாங்கள் அஜந்தா மார்க்கத்தில் போய்க் கொண்டிருப்பதாக அல்லவா நினைத்தேன்? போகவில்லையா என்ன?'' என்றாள்.

''கட்டாயம் போகிறேன், சிவகாமி! அஜந்தாவில் எனக்கு மிகவும் முக்கியமான காரியம் இருக்கிறது. அதில் உனக்குச் சம்பந்தம் உண்டு. அதைப் பற்றி உன்னிடம் சொல்லிவிட்டுப் போக வேண்டும் என்றுதான் திரும்பி அவசரமாக வந்தேன். இன்றிரவே சக்கரவர்த்தி தங்கி யிருக்கும் இடம் போய்ச் சேர்ந்துவிடுவேன்!'' என்று சொல்லிவிட்டு, சிவகாமிக்குப் பேச இடம் கொடாமல், ''இன்று பிற்பகல் அந்தப் பக்கம் போன ஊர்வலத்தைப் பார்த்தாயா?'' என்று கேட்டார் நாகநந்தி பிக்ஷு.

''ஓ! பார்த்தேன். மகேந்திர பல்லவர் கலைத் திருநாளுக்காகக் காஞ்சியிலிருந்து மாமல்லபுரத்துக்குப் புறப்படும் காட்சி ஞாபகம் வந்தது. ஏதேது? புலிகேசி சக்கரவர்த்தி மகேந்திர பல்லவரைக்கூடத் தோற்கடித்து விடுவார் போலிருக்கிறதே?'' என்றாள் சிவகாமி.

''நிச்சயமாகத் தோற்கடிப்பார். சந்தேகமில்லை. வாதாபிச் சக்கரவர்த்தி இப்போது பழைய இரத்த வெறி கொண்ட புலிகேசி அல்ல. கலை மோகமும் ரசிகத்தன்மையும் கொண்ட புதிய புலிகேசி'' என்றார் நாகநந்தி.

''அப்படியானால் அஜந்தாவிலும் கலை விழா கோலாகலமாகத்தான் இருக்கும்?'' என்றாள் சிவகாமி.



''அதிலும் சந்தேகமில்லை. அஜந்தாவின் புத்த பிக்ஷுக்கள் சக்கரவர்த்தியை ஒப்பற்ற முறையில் வரவேற்று உபசரிக்க ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இந்த வைபவத்தை முன்னிட்டுப் புகழ் பெற்ற நாலந்தாவிலிருந்தும் ஸ்ரீபர்வதத்திலிருந்தும் இன்னும் பல புத்த பீடங்களிலிருந்தும் ஆசாரிய புருஷர்கள் பலர் வந்திருக்கிறார்களாம். உனக்குத் தெரியுமோ இல்லையோ! வாதாபிச் சக்கரவர்த்திக்கு இளம் பிராயத்தில் அடைக்கலம் தந்து காப்பாற்றியது அஜந்தா சங்காராமந்தான். ஆயினும் வெகு காலம் வரையில் அஜந்தா சங்காராமத்துக்குச் சக்கரவர்த்தி எந்தவித உதவியும் செய்யவில்லை. அதற்கு ஜைன முனிவர்கள் இடம் கொடுக்கவில்லை. இராஜாங்கத்திலிருந்து செய்யும் உதவியெல்லாம் சமண மடங்களுக்கும் சமணக் கோயில்களுக்கும்தான் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்கள். ஆனால், இப்போது சக்கரவர்த்தியின் மனம் மாறிவிட்டது. சமணர், பௌத்தர், சைவர், வைஷ்ணவர் சாக்தர் ஆகிய எந்த மதத்தினரானாலும், சிற்ப - சித்திரக் கலைகளை வளர்ப்பவர்களுக்கெல்லாம் இராஜாங்கத்திலிருந்து மானியங்கள் கொடுத்து வருகிறார். இது காரணமாக இப்போது இந்தச் சளுக்க சாம்ராஜ்யம் இந்தியாவிலேயே கலை வளர்ச்சியில் சிறந்து விளங்குகிறது. கன்யாகுப்ஜத்தையும் காஞ்சியையும் வாதாபி தோற்கடித்து விட்டது!'' என்று நாகநந்தி பெருமிதத்தோடு கூறியதைச் சிவகாமி உண்மையான ஆவலோடு கேட்டுக் கொண்டு வந்தாள்.

''சிவகாமி! வாதாபிச் சக்கரவர்த்தியின் இந்த மன மாறுதலுக்கு யார் காரணம் என்று உனக்குத் தெரியுமா?'' என்று நாகநந்தி கேட்டபோது, ''சந்தேகமென்ன சுவாமி! சகல கலைகளிலும் வல்ல மகா ரசிகரான நாகநந்தியடிகள்தான்!'' என்று சிவகாமி பளிச்சென்று விடையிறுத்தாள்.

நாகநந்தியின் முகம் ஒன்பது வருஷத்துக்கு முன்பு நாம் பார்த்தபோது இருந்ததைக் காட்டிலும் இப்போது களை பொருந்தி விளங்கிற்று. முன்னே அந்த முகத்தில் நாம் கண்ட கொடூரம் இப்போது கிடையாது. சிவகாமியின் மறுமொழி அவருடைய முகத்தில் மறுமலர்ச்சியை உண்டாக்கி மேலும் களை பொருந்தியதாகச் செய்தது.

அத்தகைய முகமலர்ச்சியோடு கனிவு ததும்பிக் காந்த சக்தி வீசிய கண்களினால் சிவகாமியை அவர் நோக்கி, ''கலைவாணி! நீ கூறியது உண்மை. இரத்த தாகமும் யுத்த வெறியும் கொண்டிருந்த புலிகேசியைக் கலை மோகம் கொண்ட ரஸிகனாகச் செய்தது நான்தான். ஆனால் அதற்கு முன்னால், என்னை அத்தகைய கலைப் பித்தனாகப் பண்ணியது யார்? உன்னால் சொல்ல முடியுமா?'' என்று கேட்டார் நாகநந்தியடிகள்.

பிக்ஷு குறிப்பிடுவது தன்னைத்தான் என்று சிவகாமி மனத்துக்குள் எண்ணிக்கொண்டாள். ஆயினும் வெளிப்படையாக, ''எனக்கு எப்படித் தெரியும், சுவாமி?'' என்று கூறினாள்.

''ஆம், உனக்குத் தெரியாதுதான். இதுவரையில் உனக்கு நான் சொல்லவும் இல்லை. அஜந்தா சங்காராமத்துச் சுவர்களிலே எத்தனையோ அற்புதச் சித்



''எனக்கு எவ்வளவு அறிவு இருக்கிறதோ அவ்வளவு அறிவு என் குதிரைக்கும் இருக்கிறது.''

''இந்த ரகசியத்தை வெளியே சொல்லிவிடாதே. சமயத்தில் குதிரையை விற்க வேண்டி வந்தாலும் வரும்!''

-சரஸ்வதி பந்த

# பளபளப்பாய், வெண்மையாய், டிடர்ஜன்ட் சோப்பு துணிகளைத் தீவிரமாகச் சுத்தப்படுத்துகிறது— எப்படிச் செய்யவேண்டுமோ அப்படி. இன்னும் சிறப்பாக. பிரமிக்கத்தக்க அளவு சிறப்பாக.

தூசும் அழுக்கும் நிறைந்த உலகில் வாழ்கின்றன உங்கள் துணிகள். — அதுதான் தெரிகிறதே! அழுக்கைச் சுத்தப்படுத்துவது ஒரு தனி வேலை. அழுந்த அமர்ந்த அழுக்கை அகற்றுவது எவ்வளவு கஷ்ட வேலை என்பது எங்களுக்குத் தெரியும். எங்கள் அனுதாபங்கள். அதற்காகவே நாங்கள் உங்களுக்கு அளிப்பது புதிய ரம்யா.

புதிய ரம்யா விஞ்ஞான முறையில் கலவையானது. துணியில் ஆழச் சென்று, அழுந்தப் படிந்த ஒவ்வொரு துளி அழுக்கையும் இழுக்கும் தீவிரம் கொண்டது.

இரண்டு ஆண்டுக்கால ஆராய்ச்சிக்கும் பரிசோதனைகளுக்கும் தீவிர சோதனைகளுக்கும் பிறகு இதனை நாங்கள் உறுதியாகக் கூறுகிறோம். புதிய ரம்யா ஒரு தனித்தன்மைப் பொருளை (சர்பேக்டன்ட்) கொண்டுள்ளது. அது அழுக்கினைத் தாக்குகிறது. எங்கு ஆழப் பதிந்தாலும் அழுக்கினை வெளியேற்றி, உங்கள் துணிகளை மிருதுவாக்கி, சுத்தமாக்குகிறது. சுத்தமான சுத்தம். ஒருமுறை பாருங்கள். சுத்தமான துணிகள் எப்படி இருக்கும் என்பதைக் காண்பீர்கள்.



புதிய ரம்யா சர்பேக்டன்ட் (டோடிசில் பென்ஸீன் ஸல்போனேட்) தன் சுத்தமாக்கும் தன்மையால் அழுக்கைத் தாக்குகிறது; அதனை வெளியே இழுக்கிறது.



புதிய ரம்யாவிலுள்ள கார்பாக்ஸி மெதல் செல்லுலோஸ் கரைசலிலுள்ள வெளியேறும் அழுக்கைத் தனிப்படுத்துகிறது—உங்கள் ஆடைகளில் அது மீண்டும் படியாமல் பாதுகாக்கிறது; சுத்தத்திற்கு உத்தரவாதமளிக்கிறது.




## அழுக்குத் துணி வெளுக்க— பளீரென ஒளிவீச

புதிய ரம்யாவிலுள்ள தீவிரச் சுத்தமாக்கும் டிடர்ஜன்ட் 700 கிராம் பெட்டிக்கு ரூ. 1 சலுகை. 500 கிராம் பெட்டிக்கு 50 பைசா சலுகை பெறுங்கள்.

**விரையுங்கள்! சலுகை முடியும் நாள் 31 ஆகஸ்ட், 1975**

அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு SAA/UPL/1801



"நாளைக்கு என்றால் வர முடியாது. எனக்குத் தலைக்கு மேல் வேலை இருக்கிறது."
"அப்படி என்னப்பா வேலை?"
"ரோம் வெட்டிக்கொள்ள வேண்டும்." பி.எஸ்.ஆர்.

---

திரங்கள் — அழியா வர்ணங்களில் தீட்டிய தெய்விகச் சித்திரங்கள் — இருக்கின்றன என்று உனக்குத் தெரியுமல்லவா? அந்தச் சித்திரங்களிலே பரத நாட்டியம் ஆடும் பெண்ணின் சித்திரம் ஒன்றும் இருக்கிறது. அந்தச் சித்திரம் தான் முதன் முதலில் எனக்குக் கலை மோகத்தை உண்டாக்கிற்று, சிவகாமி! அந்த அற்புதச் சித்திரத்தை என்றைக்காவது ஒரு நாள் நீ அவசியம் பார்க்க வேண்டும்."

"வீண் ஆசை எதற்காக? அஜந்தா அதிசயங்களைப் பார்க்கும் பாக்கியம் இந்த ஜன்மத்தில் எனக்குக் கிட்டப் போவதில்லை!" என்றாள் சிவகாமி.

"அப்படிச் சொல்லாதே! இந்தத் தடவை நீ எங்களுடன் வராததில் எனக்கும் ஒரு விதத்தில் திருப்தியேதான். ஏனெனில், இந்தத் தடவை நீ எங்களுடன் வந்தாயானால் எனக்கும் மன நிம்மதியிராது; உனக்கும் மன நிம்மதியிராது. ஆனால் ,காலம் எப்போதும் இப்படியே இருந்து விடாது. சீக்கிரம் மாறியே தீரும்."

நாகநந்தி இவ்விதம் சொன்னபோது, சிவகாமியின் நெஞ்சில் சுரீர் என்றது. நாகநந்தியை அவள் கூர்ந்து நோக்கி, "காலம் எப்படி மாறும்? என்ன விதத்தில் மாறும்?" என்று கேட்டாள்.

"நீ இந்தக் கூண்டிலேயிருந்து விடுதலையடைந்து வான வெளியில் உல்லாசமாகப் பாடிக் கொண்டு சஞ்சரிக்கும் காலம் சீக்கிரத்தில் வரலாம்!"

"ஒருநாளும் வரப்போவதில்லை" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டாள் சிவகாமி.

"அப்படியானால், உன்னுடைய சபதம் நிறைவேறும் என்ற நம்பிக்கையே உனக்கு இல்லையா?" என்று நாகநந்தி கேட்டார்.

சிவகாமி பல்லைக் கடித்துச் சமாளித்துக்கொண்டு, "இல்லை, அந்த நம்பிக்கையை நான் இழந்து எத்தனையோ நாளாயிற்று!" என்றாள். ஆனால், அவளுடைய மனத்தில் பெரும் பீதியும் கலக்கமும் குடிகொண்டன. இந்த வஞ்சகப் பிக்ஷு ஏதாவது சந்தேகிக்கிறாரா? நம்மிடம் உண்மை அறியப் பார்க்கிறாரா? ஒருவேளை குண்டோதரன் இவரிடம் சிக்கிக் கொண்டிருப்பானோ?

"சிவகாமி! உன்னுடைய சபதம் நிறைவேறும் என்ற நம்பிக்கையை நீ இழந்துவிட்டாய்; ஆனால், சபதம் நிறைவேறாமல் நீ இந்த ஊரை விட்டுக் கிளம்பவும் மாட்டாய். அப்படித்தானே?"

"ஆம், சுவாமி! அப்படித்தான்!" என்று சிவகாமி தயக்கமின்றி மறுமொழி கூறினாள். அப்போதுதான் குண்டோதரனுடைய எச்சரிக்கையை அவள் நன்றியுடன் நினைத்துக் கொண்டாள்.

"ஆகா! உன்னை இந்தக் கதிக்கு உள்ளாக்க ஒரு நாளும் நான் உடன்படேன், சிவகாமி! நேற்றுச் சினப் பெரியாரிடம் சொன்னது போல் செய்ய வேண்டியதுதான். மாமல்லர் வந்து உன் சபதத்தை நிறைவேற்றி வைக்காவிடில், நானே நிறைவேற்றி வைக்கிறேன். இந்த நகருக்கு என் கையாலேயே நெருப்பு வைத்துக் கொளுத்தி விடுகிறேன்!"

"ஆ! இது என்ன பேச்சு? இந்தப் பைத்தியக்காரியின் பிடிவாதத்துக்காகத் தாங்கள் ஏன் அத்தகைய கொடிய காரியத்தைச் செய்ய வேண்டும்? வேண்டவே வேண்டாம்."



"அப்படியானால் நீயாவது உன்னுடைய அர்த்தமற்ற சபதத்தை விட்டு விடவேண்டும்."

பேச்சை மாற்றத் தீர்மானித்த சிவகாமி, "சுவாமி! என்னைப் பற்றி இவ்வளவு பேசியது போதும். தங்களைப் பற்றிச் சொல்லுங்கள்; அஜந்தாவைப் பற்றிப் பேசுங்கள்!" என்றாள்.

"ஆம்! முக்கியமாக என்னைப் பற்றிப் பேசுவதற்குத்தான் வந்தேன். அஜந்தாவில் நான் புனர்ஜன்மம் எடுக்கப் போகிறேன். திரும்பி வரும்போது காவி உடை தரித்த புத்த பிக்ஷுவாக வர மாட்டேன். பட்டுப் பீதாம்பரம் அணிந்த நீலகேசி மகாராஜாவாக வருவேன்!" என்று நாகநந்தி கூறியதும், சிவகாமி வியப்புடனே அவரை ஏறிட்டுப் பார்த்தாள். (தொடரும்)

சப்தங்கள் உள்ளே அறைந்து
திணிக்கப் படும் போது



நிரந்தரமாக
சப்தத்திலிருந்து விடுபட அணு-
குங்கள்




ஸிங்கர்*
அளிப்பவை சிறந்த
பொருட்களே

சீராக்குகிறது, பாதுகாக்கிறது
மறறும் பணத்தை சேமிக்கிறது

• ஸிங்கர் நிறுவனத்தின் வியாபார சின்னம்.

maa-SSM-26-TM



# உறவு சொல்ல ஒருவன்

சுஜாதாவின் நடிப்பாற்றலைப் பார்க்க வேண்டுமானால் பிலிமாலயா கம்பைன்ஸின் இந்தப் படத்தைப் பார்க்க வேண்டும். கார் விபத்துக்குள்ளான ஒரு பெண்ணை நேரில் பார்ப்பது போலிருக்கிறது. முகத்தில்தான் எத்தனை விரக்தி, எத்தனை சோர்வு, எத்தனை அதிருப்தி! ஆனால் வாலிபன் மோகன் அவள் தகப்பனாரிடம் வேலைக்கு வந்ததிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சோர்வெல்லாம் மறைந்து விடுகிறதே! அவள் வாழ்வு இன்னும் ஆறு மாத காலத்துக்குத்தான் என்று டாக்டர்கள் முடிவு சொன்ன பிறகு, அதிசயிக்கத் தக்க விதத்தில் படிப்படியாகக் குணமடைந்து விட்ட நிலையை, சுஜாதா நன்கு வெளிப்படுத்துகிறார். மோகனை ஆவலோடு விழுங்கி விடுவது போல் பார்க்கும் பார்வை ஒன்று போதும். முக பாவங்களைக் கொண்டே பாத்திரப் படைப்புக்கு உயிர் கொடுத்துவிட முடியும் என்பதை சுஜாதாவின் நடிப்பு எடுத்துக் காட்டுகிறது.

'பேராசை பெருநஷ்டம்' என்னும் பழமொழிக்கேற்ப இன்னொரு பெண் வருகிறாள். பணக்கார வாலிபனை மணந்து சுகபோக வாழ்க்கையில் ஈடுபட விரும்பியவள் ஒரு 'கார் மெகானிக்கை' மணந்து படு ஏமாற்றத்துக்கு உள்ளாகிறாள். அந்தப் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் பத்மப்பிரியா. அவருக்கு அழகு இருக்கிறது; கவர்ச்சி இருக்கிறது. ஆனால் நடிப்பும் வேண்டுமே!

'ஈவ் டீஸிங்'கில் ஈடுபட்டு அழகான பெண்களைக் கலாட்டா செய்யும் வாலிப 'கார் மெகானிக்'காக வருகிறார் முத்துராமன். துள்ளலும், துடிப்பும், விம்மலும் வேதனையுமாக உணர்ச்சிகளை வெளிப்படுத்தி நன்றாய் நடிக்கிறார். அவர் பெண்களைக் கலாட்டா செய்வதும் பத்மப்பிரியா அவருக்குப் பதிலடி கொடுப்பதும் அதிலிருந்து காதல் பிறப்பதும் மிகவும் சுவாரஸ்யமான நிகழ்ச்சிகள்.

சுக வாழ்க்கை வாழ நினைத்தவள், தன் காதலனை ஒரு பணக்கார நோயாளிப் பெண்ணுக்கு விட்டுக் கொடுத்து, அவள் இறந்ததும் அந்தச் சொத்தும் சுகமும் கிடைக்கும் என்று பேராசைப்பட்டவள், தெய்வாதீனமாக நோயாளிப் பெண் பூரண குணம் அடைந்ததும் தவித்துப் போகிறாள் — சங்கடமான கற்பனைதான்! இதைவிட மிக மிகச் சங்கடம் எதுவென்றால்... ஏமாற்றமடைந்த பெண் கடலில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ள முயன்ற நேரத்தில் அதிலும் தோல்விகண்டது தான்! அவளைக் காப்பாற்றித் தன்னுடன் அழைத்துச் சென்றவன்—ஏழைக் குமாஸ்தா, இவளை, ஆரம்பத்திலிருந்து மனமாரக் காதலித்தவன் — அவளால் நிராகரிக்கப்பட்டவன். ஆனால் அவன்தான் அவளுக்கு வாழ்வளிக்கிறான். இதைச் சொல்லாமல் சொல்லி விளங்க வைக்கிறார்கள். மூலக்கதை, ஏதோ வட நாட்டுக் கதையாம்! டைரக்டர் பஞ்சு அருணாசலம் வசனம் அருமையாகத் தீட்டியிருக்கிறார்.

'சோ'வின் காலத்துக்கேற்ற காமெடி சிரிக்கவும் வைத்துச் சிந்திக்கவும் வைக்கிறது. ஒரு தலைக்காதல் வயப்பட்டுத் தவிக்கும் சிவகுமார் தம் பாகத்தைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

படத்தில், பாராட்டிச் சொல்ல நடிகர்களின் நடிப்பாற்றல் உறுதுணையாயிருக்கிறது. படப்பிடிப்பும் டைரக்ஷனும் சிறப்பாயிருக்கின்றன.

—காந்தன்

# வாக்கிற்கு அருணகிரி

நம்முடைய உடம்பில் சிறந்தது சிரம். சிரத்துக்கு மேல் இருப்பது சிகை. சிகைக்கு மேலே ஓர் உறுப்பு இடையாது. அதுபோல் முருகப் பெருமானுக்கு மேற்பட்ட மூர்த்தி யில்லை. அதனால் முருகவேள் "தெய்வசிகாமணி" எனப் பேர் பெற்ருர்.

> சுக்குக்கு மிஞ்சிய வைத்தியம் இல்லை
> சுப்பிரமணிய சுவாமிக்கு மிஞ்சிய தெய்வமில்லை

என்பது பழமொழி.

இத்தகைய முருகப் பெருமான் ஒருவனையே பாடிப் பரமபதிவிரத நிலையை உலகுக்கு உணர்த்தியவர் அருணகிரிநாதர்.

இப்பரம குருநாதர் பதினைந்தாம் நூற்ருண்டில் அருணையம்பதியில் அவதரித்தவர். முருகன் கருணை முழுதும் பெற்ற முனீந்திரர். இவருடைய பெருமை அளவிடற்கரியது.



உலகிலே உள்ள உயிர்களை இரண்டு கூருகப் பிரித்தார்கள். வாய் திறந்து பேசுகின்ற உயிர்கள் உயர்திணை என்ருர்கள். வாய் திறந்து பேசாத உயிர்களை அஃறிணை என்ருர்கள். தாழ்திணை என்று கூறியிருக்க வேண்டும். தாழ்ந்தவர்களைத் தாழ்ந்தவர்கள் என்று கூறினுல் அவர்கள் உள்ளம் வருந்தும். அதனுல் உயர்வு அல்லாத திணை என்ற பொருளில் அஃறிணை யென்ருர்கள். கெஜட்டட் ஆபீசர் — நான் கெஜட்டட் ஆபீசர் என்று கூறுவதை உணர்க.



இதனுல் மனிதனுக்கு உயர்வு எதனுல் உண்டாயிற்று? வாக்கினுல் உண்டாயிற்று. நம்முடைய ஜாதக ராசி சக்கரத்தில் இரண்டாமிடம்வாக்குஸ்தானம்.

ஒரு மனிதனுக்கு வாக்கு வன்மை இருக்க வேண்டும். ஔவையார் விநாயகரை வழிபட்டால் என்ன என்ன உண்டாகும் என்று கூற வந்தவர், முதலில் "வாக்குண்டாம்" என்று கூறினுர்.

இத்தகைய வித்தக வாக்கிற் சிறந்தவர் அருணகிரிநாதர்.

> வாக்கிற் கருணகிரி ; வாதவூ ரார்கனிவில்
> தாக்கில் திருஞான சம்பந்தர் · நோக்கிற்கு
> நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
> சொற் குறுதிக் கப்பரெனச் சொல்

என்ற பழம் பாடலால் அறிக.

முருகப் பெருமானுடைய திருவருள் பெற்றவர்கள் பலர். நக்கீரர், சிகண்டி முனிவர், பொய்யாமொழி, சிதம்பர சுவாமிகள், குமரகுருபரர், ஔவையார், ஞானவரோதயர் முதலிய அநேகர் கந்தவேளின் கருணை பெற்றவர்கள்.

செவ்வேட் பரமனுடைய செங்கனி வாயால் பிரணவ ஞான உபதேசம் பெற்றவர் மூவர்.

1. சிவபெருமான்.
2. அகத்திய முனிவர்.
3. அருணகிரிநாதர்

தேவ சிரேட்டர் சிவபெருமான்.

முனி சிரேட்டர் அகஸ்தியர்.

நரசிரேட்டர் அருணகிரிநாதர் ●

இக்கருத்தை அடியில் வரும் பாடலால் அறிக.

> வேலா ! சரணம் சரணம் என்மேல்
> வெகுளாமல் இனி
> மேலா மிறுக்கடைக் கண்பார்
> பருப்பத வேந்தன்மகள்
> பாலா ! குறுமுனி யார்க்கும்
> திருப்புகழ் பண்ணவர்க்கும்
> ஆலாலம் உண்டவர்க்கும்
> உபதேசித்த என் ஆண்டவனே.

முருகன் தனக்கு உபதேசித்த கருணைத் திறத்தை அருணகிரியார் பல பாடல்களில் உள்ளம் உருகி உருகி உரைக்கின்றார்.

"எட்டிரண்டு மறியாத என் செவியில்
எட்டிரண்டும் இதுவா மிலிங்க மென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு
முருகோனே"

ஒரு பதவியில் உள்ளவர்களை ஒரு விழாவுக்கு அழைப்பதானால் எத்துணை முயற்சி செய்ய வேண்டும் என்பதை அன்பர்கள் அறிவார்கள். அவரது சமயம் சந்தர்ப்பம் பார்த்து அழைக்க வேண்டும். மிகப் பெரிய பாடு. ஆனால் அருணகிரிநாதர் கந்தவேளை — எந்த வேளை எங்கே அழைத்தாலும் ஓடி வருவாராம்.

"எங்கே நினைப்பினும் அங்கே
என்முன் வந்து எதிர்நிற்பனே"

"நீலச் சிகண்டியில் ஏறும்பிரான்
எந்த நேரத்திலும்
கோலக் குறத்தியுடன் வருவான்"

தனியே வர மாட்டாராம். எம்பிராட்டி வள்ளி நாயகியுடன் வருவாராம். இதனால் முருகனுடைய கருணையின் எளிமையும், அருணகிரியாரின் தவத்தின் அருமையும் நன்கு புலனாகின்றது.

அருணகிரிநாதர் பதினாறாயிரம் திருப்புகழ்ப் பாடல்கள் பாடியருளினார். அவ்வளவும் அரிய சந்தங்கள் நிறைந்தவை. வேத சாரமாக — தத்துவ ரத்தினங்கள் நிறைந்ததாக, மந்திர மயமாக விளங்குவன.

வேதம் வேண்டாம் சகல வித்தை வேண்டாம் நாத
கீதம் வேண்டாம் ஞானநூல் வேண்டாம் - ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்
தாள்போற்றும்

திருப்புகழைக் கேளீர் தினம்

அருணகிரிநாதர் கதிர்காமம் முதல் அரித்வாரம் வரை சுற்றி ஆங்காங்கே எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப் பாடிப் பரவசம் அடைந்தார்.

வில்லிபுத்தூராரை வாதில் வென்று கர்ண தானம் செய்தார்.

சம்பந்தாண்டானை வாதில் வென்று அரசவையில் முருகப் பெருமானை மயில்மீது வந்து காட்சி தரும்படி செய்தார்.

"சயிலம் எறிந்தகை வேல்கொடு
மயில் மிசை வந்தெனை யாட்கொளல்
சகமறியும்படி காட்டிய முருகோனே"

- திருப்புகழ்

திருப்புகழ், திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரநுபூதி — வேல் மயில் சேவல் விருத்தங்கள் என்ற ஆறு வகையான நூல்களை நமக்கு வழங்கி அருளினார்.

கந்தரநு பூதி பெற்று கந்தரநு பூதிசொன்ன
எந்தையருள் நாடி யிருக்கு நாள் எந்நாளோ

திருமுருக
கிருபானந்தவாரியார்

என்று அநுபூதிமானாகிய தாயுமானப் பெருந்தகையார் பாராட்டுகின்றார்.

"அருணகிரி நாதர்க்கு ஆறுமுகன் சொன்ன
பொருள் நலமல்லது பொருளென மதியான்"

என்று தாயுமானருடைய சீடர் அருளையர் கூறுகின்றார்.

அருணகிரிநாதர் விண்மலர் கொணர்ந்து பிரபுட மன்னனுக்குக் கண் மலர் தந்தவர்.

சிவஞானபாநுவாய்த் திகழ்ந்து அருள் ஒளி வீசியவர். இக்குருநாதர் ஆனி மாதம் பௌர்ணமி மூல நட்சத்திரத்தில் அவதரித்தவர். அதே நாளில் அத்துவித முத்தி பெற்றார். அவதரித்த நாளும் முத்தி பெற்ற நாளும் ஒன்றென உணர்க.

இப்போது அப்பரம குருநாதருடைய அறுநாறு வது ஆண்டினை அன்பர்கள் கொண்டாடுகிறார்கள்.






# வேறு வழியின்றி...

"அப்பா! என்ன தலைவலி! என்ன தலைவலி!''

நான் மண்டையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த பொழுது போலீஸ் அதிகாரி குராஜு வந்தார். ''மிஸ்டர் ரவி! உங்களை ஒன்று கேட்க வேண்டும். ஆறு மாதங்களுக்கு முன் சுரேந்திர சின்ஹா என்னும் செல்வந்தர் படுகொலை செய்யப்பட்டாரே, தெரியுமா ?'' என்று கேட்டார்.

''பத்திரிகைகளில் படித்திருக்கிறேன் !''

''கொலை செய்யப்பட்ட அன்று அவர் உங்களிடம் விமானப் பயணச் சீட்டுப் பெற்றுக் கொண்டிருக்கிறார். அன்று நல்ல மழை. நீங்கள் டாக்ஸி தேடி நின்ற பொழுது அவர் உங்களுக்கு 'லிஃப்ட்' கொடுத்திருக்கிறார்...''

''அதற்காக? கொலை செய்தவன் நான் என்கிறீர்களா?'' தலைவலியில் நான் சீறினேன்.

''ஆத்திரப்படாதீர்கள். நீங்கள் எங்கு இறங்கிக் கொண்டீர்கள்?. எங்கள் புலன் விசாரணைக்கு உதவும் என்பதற்காகக் கேட்கிறோம்!'' என்றார் குராஜு.

நான் இறங்கிக் கொண்ட இடத்தையும், எனது வக்கீல் நண்பனின் வீட்டுக்குச் சென்ற விவரத்தையும் சொன்னேன்.

தலைவலி தாளாமல் வீட்டுக்குப் புறப்பட்ட நான் சாலையைக் கடக்கும் பொழுது, என்னால் பொறுக்க முடியவில்லை. கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. அப்படியே ஆணி அடித்தாற்போல் நின்றுவிட்டேன். பலன், டாக்சிக் காரரிடமும் ஒரு சொந்தக் கார்க்காரரிடமும் வாங்கிக் கட்டிக் கொள்ளும்படி யாகிவிட்டது. ''ஏன், ஐயா! தற்கொலை செய்து கொள்வதற்கு எங்கள் கார்தானா அகப்பட்டது? இப்படி நடுத்தெருவில் நின்று ஆள் பிராணனை வாங்குகிறாயே, ஐயா! நல்ல தலைவேதனை!'' என்று சாடிவிட்டுச் சென்றார்கள்.

வீட்டுக்குப் போனபின் என் தலைவலி இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது. காரணம், எனது அன்பு மனைவியாக இருக்குமோ என்று கணக்குப் போட்டால், அது தப்புக் கணக்காக முடியும். காதல் அரும்புகட்டியிருந்ததே ஒழிய, அது மலர்ந்து கல்யாணம் வரைக்கும் கொண்டு விடவில்லை.

என் குடும்பத்துக்கு நான்தான் தலைவன். எனக்கு அப்பா இடையாது. அம்மா, அன்புத் தங்கை, அவளைக் காட்டிலும் இளைய தம்பி — இவர்களைப் பராமரிக்கும் பொறுப்பு என்னுடையது. என் தங்கைக்குக் கால் ஊனம். ஆனால் கற்பனை...? வளம் மிக்கது. இருந்த இடத்தில் இருந்து கொண்டே காணாதன கண்டு மகிழ்வாள். அன்று உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாக அவள் தன் ஆசைகளை அளந்து கொட்டினாள்: ''நீ கை நிறையப் பணம் சம்பாதித்து வா, அண்ணா! ஆக்ரா போவோம், தாஜ்மகாலைப் பார்ப்போம்... மதுரை போவோம், பிருந்தாவனத்தில் கண்ணன் செய்த லீலைகளைக் காண்போம். அப்படியே அஜந்தா, எல்லோரா என்று சுற்றி வருவோம். படிக்

கும்பொழுதே இனிக்கும் இந்த இடங்களை நேரில் பார்க்கும் பொழுது எத்தனை எழில் கொஞ்சும்! களைப்பே தெரியாமல் நான் மலையேறி, படியேறி, ஓடியாடிச் சுற்றிப் பார்த்து மகிழ்வேன், அண்ணா!'' அவளுக்குத் தன் ஊனம் மறந்துவிட்டது.

ஆனால் அறியாப் பாலகனான தம்பிக்கு அது மறக்கவில்லை. அவள் தனக்கு இணையாக ஓடியாட முடியாதே என்று எண்ணியோ என்னவோ, உள்ளத்தில் எழுந்த ஐயத்தை வெளிக் காட்டிவிட்டான். அவளுக்குத் தன் இயலாமையை நினைத்த பொழுது அழுகை குமுறிக் கொண்டு வந்தது. அதைக் கண்டு எனக்குத் துயரம் தொண்டையை அடைத்தது. ''உன் கண்களில் நீரைக் கண்டால், என் உள்ளம் என்ன பாடுபடுகிறது, தெரியுமா? பணத்தால் ஆகாத காரியம் எதுவுமே இல்லை. நிறையப் பணம் சம்பாதித்து உன்ஆசையை நிறைவேற்றி வைக்கிறேன், பார்!'' என்று அவளுக்கு ஆறுதல் கூறினேன். அவளும் எப்படியோ சமாதானம் அடைந்தாள்.

அன்று சம்பள தினம். எந்தப் புத்தகத்தில் என்ன படித்தாளோ, திடீரென்று அவளுக்கு மீன் வளர்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டிருந்தது. அதை அன்று நிறைவேற்றுவது என்று மீன்களோடு கண்ணாடிப் பெட்டி ஒன்றை வாங்கிக் கொண்டு வெளியே வந்தேன். கையில் பெட்டியுடன் டாக்ஸிக்காக நின்ற பொழுது டாக்ஸி வரவில்லை; பாழாய்ப் போன தலைவலிதான் வந்தது. அதுவும் திருகுவலியாக. இனிப் பொறுக்க முடியாது இந்தத் துயரம் என்ற அளவுக்கு நான் வசமிழந்து, நிலத்தில் விழுந்த மீனாகத் துடித்தேன். என் கைகள் தாம் பற்றியிருந்த கண்ணாடிப் பெட்டியை எப்பொழுது கைநழுவ விட்டுத் தலையைப் பிடித்துக் கொண்டனவோ, அறியேன்! நான் சுய உணர்வு பெற்றபொழுது மீன்கள் உண்மையாகவே, நிலத்தில் விழுந்து துடித்துச் செத்திருந்தன.



இந்தத் தலைவலிக்கு விமோசனமே கிடையாதா என்று நான் ஒரு பெரிய டாக்டரை அணுகிய பொழுது, அவர் எக்ஸ்ரே முதலியன எடுத்துப் பார்த்துத் தம் முடிவை அறிவித்தார்: ''மிஸ்டர் ரவி! உங்கள் மூளையிலே கட்டி புறப்பட்டிருக்கிறது. அதனால்தான் இத்தனை தலைவலி. அது தீர வேண்டுமானால் நீங்கள் ஆப்பரேஷன் செய்து கொள்ள வேண்டும். நல்லதை நினைக்கும் வேளையில் அதனால் ஏற்படக் கூடிய எதிர் விளைவையும் சொல்லிவிட வேண்டியது டாக்டராகிய என் கடமையாகும். இந்த ஆப்பரேஷனால் சில சமயம் கண் பார்வை மங்கலாம் அல்லது கைகால்கள் சுவாதீனமற்றுப் போகலாம். ஆண்டவன்மீது பாரத்தைப் போட்டு நல்லதை நினைத்தே அறுவைச் சிகிச்சை செய்து கொள்ளுங்கள். குணம் பெற்று நலமே வாழ்வீர்கள்!''

எனக்கு அது தலையிலே குண்டு போட்டாற் போலிருந்தது. 'உயிரே போனாலும் பரவாயில்லை. ஒன்றுக் கொன்று நடந்து நானும் குருடாகவோ முடமாகவோ குடும்பத்துக்குப் பாரமாகி விட்டால் என்ன ஆவது? அதற்கு இந்தத் தலைவலியே மேல்!' என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.

ஆனால் அந்தத் தலைவலியே ஒரு நாள் என் தலைக்கு ஆபத்தாய் முடிந்தது. அன்று புலன் விசாரணைக்கு வந்த போலீசார், நானே சுரேந்திர சின்ஹாவைக் கொன்றவன் என்று குற்றம் சாட்டிக் கூண்டில் ஏற்றிவிட்டனர். நானும் பார்த்தேன், தினம் தினம் இப்படித் தலைவலியால் துடித்துத் துடித்துச் சாவதைக் காட்டிலும் தூக்குத் தண்டனை பெற்று, உயிரை விட்டுவிடுவதே மேல் என்று! எனவே, எவ்விதத் தடையும் சொல்லாமல் கொலைக் குற்றத்தை ஒப்புக் கொண்டேன்.

என் காதலி நிலாவுக்கு என் பேச்சில் நம்பிக்கை ஏற்படவில்லை. அவள் தன் தந்தையிடம் கூறினாளாம்: ''அப்பா! ஒரு நாளும் அவர் குற்றவாளியாக இருக்க முடியாது. அவரை நான் நன்கு அறிவேன்.''

..ரா.செழிநாதன்..

மஜ்பூர் என்னும் ஹிந்திச் சொல்லுக்கு 'வேறு வழியின்றி' அல்லது 'நிர்ப்பந்தமாக' என்று பொருள் கொள்ளலாம். தலைப்புக்கேற்பப் படத்தைத் தொடக்க 'வேறு வழி' தோன்றாததால் கடற்கரையில் காதலர் ஊடலைக் காட்டி ஓட வைக்கிறார்கள். படம் ஓட வேண்டுமே என்பதற்காக எங்கிருந்தோ பாடகர்கள் வந்து முனகுகிறார்கள். படமும் ஓடுகிறது!

ஜஞ்ஜீர், மஜ்பூர் இரண்டு கதைகளையும் ஸலீம் ஜாவேத் ஒரே மாதிரியாக எழுதியதன் பலன், கதையில் பெயர் மாற்றத்தைத் தவிரப் புதுமையை அதிகமாகக் காண முடியவில்லை. பிரான், அமிதாப் பச்சன் இருவருடைய நடிப்புத்தான் படத்துக்கு உயிர்.

மூன்று குண்டுகளைத் தாங்கிய பின்னரும் பிரான் பிராணனை இலேசில் விடவில்லை. டாக்டரைத் தேடி அமிதாப் பச்சனின் கார் காடுமேடுகளையெல்லாம் தாண்டித் தொலைதூரம் போய் வரும் வரை உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறார். நிஜ வாழ்க்கையில் உயிர் அத்தனை நேரம் ஊசலாடாது. ஆனால் பட வாழ்க்கையில் எத்தனை நேரம் வேண்டுமானாலும் பிரான் தம் பிராணனைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்க முடியாதா, என்ன?

"இருக்கலாம். ஆனால் குற்றவாளியே தன்னைக் கொலையாளி என்று ஒப்புக்கொண்ட பின், தூக்குத் தண்டனை வழங்குவதைத் தவிர நான் வேறு என்ன அம்மா செய்ய முடியும்?" என்று பதில் சொல்லிவிட்டாராம். அவர் தான் என் வழக்கை விசாரித்த நீதிபதி.

நல்ல வேளை! அவர் தூக்குத் தண்டனை வழங்கினாரோ, நான் பிழைத்தேனோ? எங்கள் காதலுக்காக அவர் சட்டத்தின் நீக்கு-போக்குகளைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தண்டனை அளிக்காமல் விட்டிருந்தால் இந்தத் தலைவலியினாலேயே மடிய வேண்டியதுதான் என்று எண்ணிய வேளையில் தலைவலி வந்துவிட்டது. எல்லாத் தடவைகளைக் காட்டிலும் இந்தத் தடவை தலைவலி ரொம்பக் கடுமை. நான் சிறைச்சாலையில் தன்னறிவு இழந்து விழுந்தேன்.

நான் என் சுய அறிவு பெற்றபொழுது ஆஸ்பத்திரியில் தலையில் கட்டோடு கிடந்தேன். மூளை ஆப்பரேஷன் ஆகி நான் எந்தவிதக் கோளாறுக்கும் இரையாகாமல் தப்பிப் பிழைத்துவிட்டேனாம். அறுவைச் சிகிச்சை செய்த டாக்டருக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி! ஆனால் எனக்கு....? தூக்குத் தண்டனை பெறப் போகிறவனுக்கு இந்தச் சிகிச்சை எல்லாம் எதற்கு என்ற எரிச்சல்!

என்னைக் காண வந்த வக்கீல் நண்பன் கேட்டான்: "ஏன்டா, மண்டு! எதற்காகவடா அந்த சுரேந்திர சின்ஹாவைக் கொன்றாய்?"

"நான் எங்கேடா கொன்றேன்?"

"பின்னே....?"

"போலீசார் ஐந்து லட்சம் ரூபாயுடன் உன்னைக் காண வருவார்கள் என்றும், அதைப் பெற்றுக் கொண்டு அவர்களிடம் ஒரு கடிதத்தைக் கொடுக்குமாறும் மொட்டைக் கடிதம் வந்ததா?"

"வந்தது!"

"அதோடு ஒரு சீல் வைத்த கவரும் வந்திருக்குமே!"

"வந்தது!"

"அதில் உண்மை விவரம் முழுதும் எழுதியிருக்கிறேன். அதைச் சுருக்கமாக இப்பொழுது நானே சொல்லி விடுகிறேனே! இப்படி அன்றாடம் தலைவலியால் அவதிப்பட்டுச் சாகாமல் சாவதைக் காட்டிலும், ஐந்து லட்சம் ரூபாயுடன் எனக்கு ஒரு சாவு வந்தால் கசக்குமா? சுரேந்திர சின்ஹாவைக் கொன்ற குற்றவாளியைக் கண்டுபிடித்துத் தருபவர்களுக்கு ஐந்து லட்சம் ரூபாய் தருவதாக விளம்பரப்படுத்தியிருந்தார்கள். ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கத் திட்டமிட்டேன். தூக்குத் தண்டனை என் தலைவலியைப் போக்கிவிடும். ஐந்து லட்சம் என் குடும்பம் வாழ வழி வகுத்துக் கொடுத்துவிடும் என்று நிர்மானித்து என்னை நானே கொலைக்குற்றவாளியாக்கிக் கொண்டேன்!"

"அடப்பாவி! கெடுத்தியே!"

"இப்போ தலைவலி நீங்கிவிட்டது என்ற நிலையில் எனக்குச் சாக மனம் இல்லை. அந்த சீல் கவரை வைத்துக் கொண்டு என்னைக் காப்பாற்றிவிட முடியுமா?"

"எப்படி முடியும்? தலைவலி போய்த் திருகுவலிங்கிற கதையாக அல்லவா ஆகிவிட்டது! இனி எந்தத் தர்க்கமும் எடுபடாதே. எதுவும் முன்கூட்டித் திட்டப்பட்ட திட்டம் என்றல்லவா கருதப்படும்! இப்படி அசட்டுத்தனம் பண்ணுவாயோ?"

"தலைவலியிலிருந்து தப்ப எனக்கு அப்போ வேறு வழி தோணவில்லையடா!"

"தூக்குத் தண்டனையிலிருந்து தப்புவிக்க எனக்கு இப்போ எந்த வழியுமே தோணவில்லையடா!" என்று வக்கீல் நண்பன் கைவிரித்துவிட்டான்.

எனக்கோ சாக மனம் வரவில்லை. நடப்பது நடக்கட்டும். இந்த ஆஸ்பத்திரியிலிருந்து சிறைக்குக் கொண்டு போவதற்குமுன் நாம் தப்பி ஓடிவிடுவோம். உண்மைக் குற்றவாளியை எப்படியாவது கண்டுபிடித்து நம்மை நிரபராதி என்று நிரூபித்துவிடுவோம் என்று முடிவு கட்டி அதைச் செயலாக்கினேன்.

காதலிருவர் கருத்தொருமித்துச் செயற்பட்டால் விண்ணையும் சாடலாம் என்று யாரோ சொன்னது நினைவுக்கு வரவே, காதலி நீலாவைத் துணைக்குக் கூப்பிட்டுக் கொண்டேன். ஒரு ஹோட்டலில் சிற்றுண்டி அருந்தச் சென்றபொழுது, என் கருத்தை ஒரு விரலில் இருந்த மோதிரம் கவர்ந்தது. இந்த மோதிரத்தை இதற்குமுன் எங்கே பார்த்திருக்கிறோம்? நினைவைத் தட்டிய பொழுது, அன்று விமானப் பயணச் சீட்டு வாங்க வந்த சுரேந்திர சின்ஹாவின் விரலில் பார்த்தது நினைவுக்கு வந்தது. இந்த மோதிரம் இவரிடம் எப்படி வந்தது? அந்த ஆளின் முகத்தைப் பார்த்தேன். எனக்குத் தெரிந்த முகம். ஆனால் அதிகம் அறிமுகம் இல்லாதவர்..... கோடீசுவரர்; கட்டிய மனைவி இருக்க ஊர் மேய்பவர் என்பதும் எனக்கு ஓரளவு தெரியும். மோதிரத்தையும் அவரையும் முடிபோட்டுப் பார்த்த எனக்கு அவரே கொலை

*Sssssh.....*
*she's learning*

Anjali is beginning to do what we have been doing for 187 years — learning. Like her, Parryware started young. And from there it's been a never ending process. Developing and perfecting our techniques scientifically, to give you Durability and Reliability.

Besides, Parryware designers know what colours please people. So, they have come up with six gentle shades—all chosen and designed to suit your home. It's no wonder Parryware is India's largest selling Sanitaryware.

—And we're still learning.



Parryware
VITREOUS

**E.I.D.-PARRY LTD.**
Dare House, Madras 600 001.

FDS PW 2128A

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...



# உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். உங்கள் அருமைபதிந்து உருவாக்கிய அருமையான செல்வம். வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலாரத் தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு: ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

## அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
## நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

யாளியாகத் தோன்றினார். தனிமையில் நான் அவரை மிரட்டியபோது, இன்ன கடையில் இன்ன விலைக்கு வாங்கினேன் என்று கூறி விலாசமும் கொடுத்தார். கடைக்காரனைக் காய்ச்சியபொழுது, அவன் மைக்கேல் என்னும் திருடனைக் காட்டிக் கொடுத்தான். அவன் திருட்டுப் பொருள்களை அவனிடம் கொண்டு வந்து விற்கும் வழக்கமாம்.

எப்படியாவது தூக்குத் தண்டனையிலிருந்து உயிர் பிழைத்தாக வேண்டும் என்ற வேகம் சிங்கத்தைக் குகையிலேயே சந்திக்கும் துணிவை எனக்குக் கொடுத்தது. 'உன் அதட்டலுக்கு இந்த மைக்கேல் மசிய மாட்டான். இந்த மோதிரத்தைத் தேடி வரக் காரணம் என்ன, சொல்?' என்று அவன் என்னை மடக்கினான். நான் விவரத்தைச் சாங்கோபாங்கமாக அவனிடம் கூறினேன். என் நிலை, என் குடும்ப நிலையைக் கேட்ட அவன் கல்லுக்குள் ஈரமாகக் கசிந்தான். ''இந்த மைக்கேல் திருடன்தான். இதுவரையில் யாரையும் கொன்று பொருள் ஈட்டியதில்லை இவன். வெற்றுத் தோட்டாவைக் காட்டி மிரட்டியே பொருள்களை அபகரித்திருக்கிறான். இந்த மோதிரம் கிடைத்த அன்று நல்ல மழை பெய்தது. கார் ஒன்றை வழியில் மடக்கினேன். காரோட்டி தன்னிடம் எதுவும் இல்லை என்றான். 'பின்னால் யார் ?' என்று கேட்டேன். 'நோயாளி' என்றான். 'அவன் கையில் அதோ....' நான் காட்டிய மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்துவிட்டுத் தப்பினோம், பிழைத்தோம் என்று ஓடிவிட்டான். நீ சொல்வதிலிருந்து அவன்தான் கொலையாளியாக இருக்க வேண்டும். அவனை உன் கையில் ஒப்படைத்துவிட்டே ஓய்வேன்!'' என்றான்.

அதோடு சொன்னபடியே செய்தும் காட்டினான். ஓடிப் போன குற்றவாளியான எனக்கு அவனைக் காட்டித் தருவதாகக் கூறி அழைத்து வந்தான். அதற்காக அவன் பேசிய கூலி ஏழரை லட்சம். அவன் கொண்டு வந்த ஆள் யார், தெரியுமா? சுரேந்திர சின்ஹாவின் தம்பி நரேந்திர சின்ஹா. தமையனைத் தம்பி ஏன் கொல்ல வேண்டும் ? பணத்தாசையா ? இல்லை; பெண்ணாசை ! அதுவும் தமையனின் மனைவியுடனேயே அவ்யாகிருத வியாபாரம் ! என்னிடம் விமானப் பயணத்துக்குச் சீட்டு வாங்கிக் கொண்டு வீடு திரும்பிய சுரேந்திர சின்ஹா நேருக்கு நேர் இக்காட்சியைக் கண்டிருக்கிறார். அண்ணனுக்கும் தம்பிக்கும் இடையே பேச்சுத் தடித்திருக்கிறது. அதுவே கடைசியில் அண்ணனுக்கு எமனாக முடிந்திருக்கிறது.

அந்தக் கொலைகாரனைக் காட்டிக் கொடுத்ததன் பலன், மைக்கேலின் உடலை மூன்று குண்டுகள் துளைத்துவிட்டன. என்னைப் பொறுத்தவரை மைக்கேல் என் உள்ளங் கவர்கள்வன் ; என்னை வாழ வைக்க வந்த மகாத்மா !

ஆனால், நான்....? வேறு வழியின்றிச் செய்யாத குற்றங்களைச் செய்ததாகச் சொல்லிக் கொண்டு ஓர் உயிருக்குக் கேடு விளைவித்த பாவி ; மாபாவி !





அதிகாலையில் அவன் துயிலிலிருந்து விடுபட்டபோது அவள் இன்னும் நித்திரையில் ஆழ்ந்திருந்தாள். பார்க்காத ஒன்றைப் புதிதாகப் பார்ப்பது போல் அவளை அவன் மீண்டும் பார்த்தான். ''அவள் யார்?'' என்ற கேள்வி ஒன்று அவனுள்ளே எழுந்து அவனுக்குச் சங்கடத்தை ஊட்டியது.

ஓராண்டுக்குச் சிலகாலம் குறைவாக அவன் அவளை அறிந்திருந்தான். ஓராண்டுக்கு மேல் அவன் அவளுடன் பழகவும் முடியாது. அது சமுதாய நியதி. ஓர் ஆண்டுக் காலம், ஒரே ஆண்டுக் காலம்! அதற்குள் அந்நியளான அவளை அவன் தெரிந்து கொண்டு, அவள் இனிமையையும் மென்மையையும் உணர்ந்து, ரசித்து, அனுபவித்து, அவளுடன் பந்தமும் பாசமும் பிணைக்கும் பற்றுதலும் கொண்டு, பிறகு அந்த ஆண்டு முடிகிறது என்ற ஒரே காரணத்துக்காக, அவிழ்க்க முடியாத முடிச்சுக்குக் கூரான கத்தியால் விடுப்புக் காண்பது போல், எல்லா அந்தரங்கங்களையும் வலிக்க வலிக்க வெட்டிவிட்டு அவளை அவன் பிரிந்தே ஆக வேண்டும். அது அவர்கள் சமுதாய நியதி.

கிழக்கு வெளுக்க ஆரம்பித்தது. கட்டிலின் முனையில் ஒரு பொத்தானை அவன் அழுத்த, சப்தமின்றி ஜன்னல் திரைச் சீலை மெல்ல

# எப்போதும் உள்ளவர்கள்

## வி. இராமமூர்த்தி

விலகியது. வானவெளி வெளிர்நீலம் பெற்றிருந்தது. அதிலே அழகிழந்த பெண் ஒருத்தி தன் இழப்பை உணராது உலா வருவதுபோல் நான்காம் நாள் தேய்பிறைச் சந்திரனின் உருவம் மங்கித் தெரிந்தது.

அவன் பார்வை அறைக்குள் திரும்பியது. மெல்லிருளில் அவள் முகம் பளிங்கு பிம்பமாகத் தெரிந்தது. அவள் சிரித்தாள். அது கனவில் என்று அவன் நினைத்தான். அவன் நினைத்தது தவறு என்று உணர்த்துவதுபோல் அவள் அவன் கைகளைப் பற்றித் தன் கன்னங்களில் பதித்துக் கொண்டாள்.

''எழுந்து விட்டாயா, நீலா?'' என்றான் அவன் ஆசையுடன்.

''உஷ்!'' என்றாள் அவள். ''நான் பெயர் இல்லாதவள், சூர்யா! நாம் எல்லோருமே பெயரில்லாதவர்கள். பெரிய சமுதாயத்தின் பேரில்லாத சிறு உறுப்புக்கள். அதை நீ மறந்தால் சமுதாயத்துக்கு எதிராகக் குற்றம் இழைத்தவனாவாய்!'' என்று சொல்லி மெல்லச் சிரித்தாள்.

அவனும் சிரித்தான். உண்மைதான். சமுதாயத்தின் சட்டத்தின் மகத்துவத்தை உணர்ந்து தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன், எக்ஸ். எக்ஸ். 209F 433 112!'' என்றான் அவன்.



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

## ரூபாய் 500/- இரண்டாவது பரிசுக் கதை

''நீ மன்னிக்கப்பட்டாய், எக்ஸ், ஓய். 1596 348 18F!''

''நன்றி, என். அன்புக்குரியவனே!''

ஜன்னலின் வெளியே பறவைகள் சுழன்றும் சப்தமிட்டும் பகலவன் வருகையைத் தெரிவித்தன. அவன் சட்டென்று எழுந்து சுவரில் மாட்டியிருந்த நாட்காட்டியைப் பார்த்தான். அதில் இருந்த விவரம் கடந்த நூறு நாட்களாகவே அவனுக்கு அத்துபடிதான். ஆயினும் நாட்காட்டியைப் பார்ப்பதும், இதில் கொண்டு பதறுவதும் அவர்களுக்குத் தவிர்க்க முடியாத ஒரு கட்டாயம் ஆகிவிட்டது.

''இருநூற்றி நாற்பது நாட்களாக நாம் இணைந்து வாழ்ந்து விட்டோம், சூர்யா!'' என்றான் அவள். அவன் கண்களில் எப்போதும் இருந்த ஒளியைக் குறித்து அவனுக்கு அவள் இட்ட பெயர் அது. அவள் கருநீலக் கூந்தல் செறிவை வைத்து அவன் அவளை ''நீலா'' என்று அழைத்தான். சமுதாயம் தந்த வெறும் எண்களில் இருந்த சுவையின்மையை அப்படி வெல்ல முற்பட்டார்கள் அவர்கள்.

ஒரு விடுமுறை நாள். காலை நேரம். ஜன்னல் வழியே வந்த இளம் வெய்யில் கதிர்கள் அவர்களுடன் குழந்தைகளாக உறவாட, மேஜை அருகே அமர்ந்து காலை உணவு அருந்திக் கொண்டிருந்தார்கள் அவர்கள்.

''நீலா! உன்னைப் பற்றிச் சொல், எனக்குக் கேட்க வேண்டும்போலிருக்கிறது'' என்றான்..

''மீண்டுமா?'' — பரிகசித்தாள் அவள்.

''பிடித்த புத்தகத்தைப் பலமுறை படித்துக்கொண்டே இருப்பதில்லையா?''

''அப்படியானால் சரி, நான் சொன்ன பிறகு, நீயும் உன்னைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். சரிதானா?'' அவன் தலையை ஆட்டி அவன் அருகில் நெருங்கி அமர அவள் சொல்லத் தொடங்கினாள்:

''என் எக்ஸ் எக்ஸ் 209F 433 112. பெண்பால். கண் விழி நிறம் கறுப்பு. தலைமயிர் நிறமும் அப்படியே. வயது இருபத்தொன்று நிறைந்து, நடப்பது இருபத்திரண்டு. உயரம் 155 சென்டிமீட்டர்.

''செக்டார் 83ல் ஜனவரிக் குழந்தையாகப் பிறந்தேன். அதாவது ஜனவரி ஒன்றிலிருந்து ஜூன் முப்பதுக்குள் ஏதோ ஒரு தேதியில் பிறந்தவள். பிறந்த செக்டாரிலேயே என் பள்ளிப் படிப்பு நடந்து முடிந்தது. பதினாறாவது வயதில் நர்ஸ் பயிற்சிக்காக அரசு கமிட்டியால் தேர்ந்தெடுக்கப்பட்டேன். பத்தொன்பது வயதில் அதை வெற்றிகரமாக முடித்தேன். பிறகு இரண்டு ஆண்டுகள், நான்கைந்து ஆஸ்பத்திரிகளில் வெவ்வேறு வேலைகளைத் திறம்படச் செய்தேன்.

''இருபத்தோரு வயது நிறையும் முன்பு ''தாய்மைத் தகுதி'' பரிசோதனைக்குச் சென்றேன். அதில் தேறினேன். என்னைப் பற்றிய விவரங்களை ஆண்—பெண் இணைப்புப் பதிவு நிலையத்துக்கு அனுப்பினார்கள். அதே நேரத்தில், ''ஆண்கள் — பெண்கள் உறவும், குடிமக்கள் பொறுப்பும்'' என்பது குறித்து ஆறு வாரங்கள் எங்கள் டிவிஷன் சமுதாய நலப் பள்ளியில் பயிற்சி பெற்றேன்.

''இந்த நாட்டுத் தலைநகரில் எங்கேயோ ஒரு ராக்ஷசக் கட்டிடத்தில் ஒரு கம்ப்யூட்டர் இயந்திரம் உன் என்னையும் என்னுடையதையும் பொருத்தம் என்று இணைத்தது. உன்னுடன் சேர எனக்கு உத்தரவு வந்தது. எனக்குப் பயமாக இருந்தது. முன் பின் தெரியாத ஓர் ஆணுடன் எப்படி இணைந்து வாழப் போகிறோம் என்று. 'கவலைப்படாதே ஓர் ஆண்டுதான்' என்று சொல்லி அனுப்பினார்கள்.''

சூர்யா மௌனமாக அவளை விழிகளால் விழுங்கிக் கொண்டிருந்தான்.

''நீ சொல் சூர்யா! உன்னைப் பற்றிய விவரங்கள் அடிப்படையானவை. எனக்குத் தெரியும். ஆனால் இன்று புதிதாக ஒன்று கேட்கப் போகிறேன். எனக்கு முன் உன்னுடன் வாழ்ந்த பெண்கள் யார்? அவர்களைப் பற்றிச் சொல்லு'' என்றாள் நீலா.

''இதுவரை நீ அதுபற்றிக் கேட்டதே இல்லையே!'' என்றான் அவன். — அவனுக்கு ஏதோ ஒரு கூச்சம். அதைத் துணிந்து வென்றவனாய், ''எல்லாவற்றையும் முதலிலிருந்தே சொல்கிறேன், நீலா! என் வாழ்க்கையை நானே மீண்டும் பார்த்துக் கொள்ள அது உதவும்!'' என்றான்.

''என் எக்ஸ். ஒய். 1596 348 18F!''

''இதோ மணிக்கட்டில் தெரிகிறதே!'' என்று அவள் காட்டினாள்.

''ஆம், குழந்தை பிறந்த மூன்றாவது நாளன்று இரு கைகளின் உள் மணிக்கட்டுக்கள், பிடரி ஆகிய மூன்று இடங்களிலும் கதிரியக்க அச்சு மூலம் இந்த எண்கள் பதிக்கப்படுகின்றன. இவற்றை அழிக்கவே முடியாது.

''தொடர்ந்து சொல்கிறேன், கேள்! ஆண்பால்...''

அவள் முகத்தில் ஒரு குறுகுறுப்புச் சிரிப்பு விளையாடியது. அவன் தொடர்ந்தான்:

''...உயரம் 183 சென்டி மீட்டர். தலைமயிர் கறுப்பு, விழி நிறம் கறுப்பு. வயது 28. நான் ஜூலைக் குழந்தை. அதாவது வருடத்தின் பிற்பகுதியில் பிறந்தவன். செக்டார் 16Fல். செக்டார் 40ல் என் பள்ளிப் படிப்பு. மேற்படிப்புக்கான தேர்வுக் கமிட்டியால் நான் சரித்திரப் படிப்புக்கு அனுப்பப்பட்டேன். என் ஐ. க்யூ. 141. செவ்வாய்க் கிரக ஆராய்ச்சிகளில் நான் பயன்படுத்தப் பட்டிருக்கக் கூடும். ஆனால் சரித்திர ஆராய்ச்சிக்குச் சிறந்த ஆற்றலுடையவர்கள் தேவை என்று சில ஆண்டுகளுக்கு முன்பு முடிவு செய்திருந்தார்கள். சரித்திரப் படிப்பில், சமுதாய வளர்ச்சியின் வரலாற்று நுணுக்கங்களில் நான் மிகுந்த ஈடுபாடு கொண்டு ஊறிப்போனேன்.

''நிமிரென்று பார்த்தால் எனக்கு வயது இருபத்து நான்கை எட்டிக் கொண்டிருந்தது. என்னைத் தந்தையாகும் தகுதி நிலையத்துக்கு அனுப்பினார்கள். உடற் பரிசோதனை, மனோதத்துவ சோதனைகள் எல்லாம் நடத்தினார்கள். அவற்றைத் தொடர்ந்து நம் சமுதாயம் வகுத்துள்ள கட்டுப்பாட்டு இல்லறத்தில் ஈடுபட அனுமதி எனக்கு வழங்கப்பட்டது. முதல் மூன்று ஆண்டுகளில் மூன்று பெண்களுடன் வாழ்ந்து விட்டேன். கம்ப்யூட்டர் எனக்கு வழங்கிய நான்காவது ஆண்டுத் துணை நீ!''

அவள் கவனமாகக் கேட்டுக் கொண்டு வந்தாள். அவன் சற்று நிறுத்தியதும், ஆவலோடு, ''சூர்யா! எனக்கு முந்தைய அவர்களைப் பற்றிச் சொல்லு!'' என்றாள்.

''சொல்கிறேன், நீலா. ஆனால் உண்மையிலே உன்னுடன் வாழ்ந்த பிறகு அந்த நினைவுகள் நிழலாகி விட்டன. பொய் போன்று கூடத் தெரிகின்றன!

''முதல் ஆண்டில் கம்ப்யூட்டர் என்னை ஓர் இருபத்தி மூன்று வயதுக் கன்னிப் பெண்ணுடன் இணைத்தது. அவள் ஒரு மின்னணுத் துறை இன்ஜினியர். ஆறு மாதங்களில் அவள் கருவுற்றாள். அது உறுதி என்று தெரிந்ததும் விதிகளின்படி அவளை என்னிடமிருந்து பிரித்து மகப்பேறு முன் பாதுகாப்பு நிலையம் ஒன்றுக்குக் கொண்டு போய் விட்டார்கள். அதற்கப்புறம் நான் அவளைப் பார்க்கவே யில்லை, பார்க்கவும் முடியாது! ஆறு மாதங்கள் என் வாழ்க்கை வெறுமையாகவே இருந்தது. இதுபோன்ற நிலையில் உள்ளவர்களுக்கென்றே அரசு நடத்தும் இன்பப் பரிமாற்ற விடுதிகளுக்கு நான் போயிருக்கலாம். சொன்னால் நீ நம்ப மாட்டாய். ஒரு நாள் கூட நான் அங்கே போனேன் இல்லை. அப்போது நான் ஆரோக்கியமான உடலில் ஆரோக்கியமாக எழும் இள உணர்ச்சிகளும் எழுச்சிகளும் நிறைந்த இருபத்தைந்து வயது இளைஞன். ஒரு பெண்ணைத் தாயாக்கிய பெருமிதத்தை உணர்ந்தவன். என் சரித்திர ஆராய்ச்சியில் ஆழ்ந்து ஈடுபடுவதன் மூலமே என் தனிமையை நான் மறக்க முயன்றேன்.''

''அப்புறம்?''

சோர்வா?
பலவீனமா?



சாப்பிடுங்கள்

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்—
# விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுப்பொருட்களும்
# அடங்கிய பரிபூரண டானிக்

சில டானிக்குகளில் விட்டமின்கள் மட்டுமே உள்ளன. சிலவற்றில் தாதுச் சத்துக்களோ அல்லது இரும்புச் சத்தோதான் உள்ளன. வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் பரிபூரணமானது. அதில் விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுச்சத்துக்களும் சமசீராக இணைந்துள்ளன—

தினமும் உற்சாகமும், சக்தியும், வலிமையும் கொடுக்கிறது.

விட்டமின்கள் நிரம்பியது




## வாட்டர்பரீஸ்
# விட்டமின் டானிக்

சுறுசுறுப்பான ஆரோக்கியத்திற்கு
பரிபூரணமான டானிக்

Grant 9 TM

## அடுத்த இதழில்...

**பரிசுக் கதை :**

**பத்து வருஷப் பைத்தியம்**

அன்னம்

**டிவி..... ஹி ஹி !**

டிவி பார்த்துக் கண் கெடுவது கிடக்கட்டும், தராஜாவின் டிவி ஹிஹி படித்துச் சிரித்து வயிறு வேறு புண்ணாகப் போகிறது !





**டில்லி வியூன்**

புது தில்லியில் டிவி வாங்கியவர்கள் படுகிற அவஸ்தையைப் பார்த்தால் போதும் போதும் என்றாகி விடலாம் !

''அப்புறம் அடுத்த ஆண்டு தொடங்கி விட்டது. வேறு ஓர் ஊர், வேறு ஒரு வீடு. கம்ப்யூட்டர் எனக்கென்று அந்த ஆண்டுக்கு இணைத்துத் தந்த வேறு ஒரு பெண். அந்த ஆண்டு நான் ஒரு கல்லூரியில் ஆசிரியர் வேலை பார்த்தேன். என் வாழ்வில் எனக்கு இரண்டாவது துணையாக வாய்த்தவள் ஒரு மனத் தத்துவத் துறை ஆராய்ச்சிக்காரி. அவளுக்கும என் வயதுதான். ஆனால் அவள் ஏற்கெனவே ஒரு குழந்தை பெற்றவள். பெண்களின் அந்த அனுபவத்தைப் பற்றி யெல்லாம் அந்தரங்கமாக நான் அவளிடமிருந்து தான் தெரிந்து கொண்டேன். குழந்தைப் பிறப்பு பற்றி நாம் படித்திருக்கிறோம். அதைத் தாய்க்கு வலியில்லாத ஓர் அனுபவமாக நம் கால விஞ்ஞானம் செய்தும் விட்டிருக்கிறது. ஆனால்தன் குழந்தையைத் தொட்டுத் தூக்கி அரவணைத்துப் பாலூட்டிச் சீராட்டி மூன்று மாதங்கள் ஆனதும், அரசு சொல்கிறது என்பதற்காக ஒருநாள் முன் பின் தெரியாத ஓர் அரசு அதிகாரியிடம் குழந்தையைத் தந்து அன்றிலிருந்து அதை அடியோடு மறந்துவிடுவதைப் போல் வேதனை வேறு இல்லை என்றாள் ரோஜா. அதுதான் என் இரண்டாவது துணையாக வந்தவளை நான் கூப்பிட்டு அழைத்த பேர்...''

''அவள் — ரோஜா — உன்னிடம் கருவுறவில்லையா, சூர்யா?''

''கடைசி மாதம்வரை இல்லை, நீலா! முன் ஆண்டின் வெறுமைதான் எனக்குப் பாடம் கற்றுத் தந்திருந்ததே! அவளுக்கும் மீண்டும் ஒரு முறை பிள்ளையைப் பெற்று அரசிடம் தருவதில் ஆவல் இல்லை!''

''சரி, மூன்றாவது பெண்...''

''...குயிலி! அவளுடன் என் வாழ்வு ஒரு 'டிராஜெடி'. சென்ற ஆண்டு கடற்கரைப் பகுதியில் ஓர் ஊரில் ஓர் அழகான வீடு எனக்கு நிர்ணயிக்கப்பட்டது. ''சரித்திரத்தின் ஏணிப்படிகள்'' என்ற ஆராய்ச்சி நூல் ஒன்றை நான் எழுதிக் கொண்டிருந்தேன். எனக்குத் துணையாக அந்த ஆண்டு வந்தவள் இனிய குரல் வாய்ந்த ஒரு பாடகி. கட்டுப்பாட்டு இல்லறத்தில் அது அவளுக்கு இரண்டாவது ஆண்டு. அவள் மிக நன்றாகப் பாடுவாள். நான் அவளைக் குயில் என்பேன். அவள் என்னை வேடிக்கையாக ''ஹெரோடோட்டஸ்'' என்பாள். நாங்கள் இருவரும் மிகவும் மகிழ்ந்திருந்தோம். அதில் ஆச்சரியமில்லை. கம்ப்யூட்டர் ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் இணைக்கும்போது, அவர்களுடைய தத்தம் வயதுகள், வளர்ச்சி நிலைகள், உடல், உள்ள உணர்ச்சி ஒற்றுமைகள், வேறுபாடுகள், தேவைகள், நாட்டங்கள், எல்லாவற்றையும் கணித்துத்தான் முடிவு செய்கிறது. எனவே பெரும்பாலான எண்ணிக்கை முடிவுகள் சரியாகவே அமைகின்றன. சில தான் தவறுகின்றன.

''குயிலியும் நானும் சந்தோஷமாகவே இருந்தோம். நீலா, எங்கள் வாழ்வு நான்கு மாதங்கள், பதினெட்டு நாட்கள்தான் நீடித்தது!''

''ஏன் சூர்யா, என்ன ஆயிற்று?''

''சென்ற ஆண்டு தலைநகர் அருகில் நடந்த ராக்கெட் விமான விபத்தில் உயிரிழந்தவர்களுள் குயிலியும் ஒருத்தி!''

நீலாவுக்கு அவன் மேல் பரிதாபம் தோன்றி. அது அவளை அவனுடன் இன்னும் நெருக்கமாகப் பிணைத்தது.

''புத்தாண்டும் வந்தது. என் வாழ்க்கையில் நீ வந்து சேர்ந்தாய். என்னைச் சூழ்ந்திருந்த இருளை எல்லாம் போக்கடித்தாய். உன்னைப் பிரிந்து வாழ்க்கை என்று ஒன்றை என்னால் எண்ணியே பார்க்க முடியவில்லை, நீலா!'' என்று அவன் சொல்லி முடித்த போது, நீலாவும் நீண்ட பெருமூச்செறிந்தாள்.

விருட்டென்று எழுந்தாள் நீலா. ''பேசிக் கொண்டே இருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. பார்த்தாயா, சூரியா! மணி பதினொன்று. இன்று விடுமுறை நாள்!''

''ஆம், நேரத்தை நாம் வீணாக்கக்கூடாது'' என்றான் அவன். நேரத்தை வீணாக்கவில்லை அவர்கள்!

**ப**தினோராம் மாதம், பதினோராம் நாள்.

''சூரியா! நம் திட்டம் வெற்றி பெறுமா?'' என்று கேட்டாள் நீலா.

''நிச்சயம்'' என்றான் சூரியா.

எவ்வளவோ யோசனை செய்து தப்பிக்கும் திட்டத்தை வகுப்பதில் ஈடுபட்டான் அவன்.

ஒவ்வொரு ஆண்டும் பன்னிரண்டாம் மாதம் இருபத்தைந்தாவது நாளன்று கட்டுப்பாட்டு இல்லற ஜோடிகள் இணைபிரிய வேண்டும் என்பது சட்டம். அவ்வாறு பிரிந்து ஆண்களும் பெண்களும் அவரவர்களுக்கு நிர்ணயித்திருந்த பல்வேறு நிலையங்களுக்குச் செல்ல வேண்டும். நிலையங்களில் ஒவ்வொருவருக்கும் கம்ப்யூட்டர் முடிவு செய்த புதிய ஊர், புதிய வேலை, புதிய துணை பற்றிய விவரங்கள் தரப்படும். அன்று அவ்வாறு செய்வதில்லை என்று சூரியாவும் நீலாவும் முடிவு செய்து விட்டனர். மற்ற விவரங்கள் படிப்படியே உருப்பெற ஆரம்பித்தன.

**ப**தினொராம் மாதம். இருபதாம் நாள்.

''இந்த வீட்டிலேயே நாம் இருந்துவிட முடியாது நீலா! நீ உன் நிலையத்திலும் நான் என்னுடையதிலும் புத்தாண்டுப் பதிவுக்கு வரவில்லை என்றதுமே, நம் எண்களும் உருவத் தோற்றங்களும் சட்டத்தை மீறிய குற்றவாளிகளினுடையதாக அறிவிக்கப்பட்டுவிடும். வீட்டிலோ, தெருவிலோ, மனிதர்கள் நடமாடும் பொது இடங்களிலோ நம்மை நொடியில் கண்டுபிடித்து விடுவார்கள்'' என்று சூரியா சொன்னதை நீலா ஆமோதித்தாள்.

மெதுவாக அவர்கள் திட்டம் நுணுக்கங்களுடன் வளர்ந்தது.

சூரியா தன் முழுத் திட்டத்தையும் அவளுக்குத் தெரிவித்தான்.

அவர்கள் ஊருக்கு நூற்றுமுப்பது மைல் தூரத்தில் வடகிழக்கு நெடும் பாதையிலிருந்து விலகிக் கொஞ்சம் தொலைவில் பல ஆண்டுகளுக்கு முன்பு மூடப்பட்டுவிட்ட அணு யந்திர நிலையம் ஒன்று இருந்தது. விண் பயணக் கலங்களுக்கான அணு எரிபொருள் தயாரிக்கும் அந்த நிலையத்தில் வெடி விபத்து ஒன்று ஏற்பட்டதால் கதிரியக்க அபாயம் தோன்றி நிலையத்தை மூடிவிட்டனர். யந்திரங்கள் முதலியவற்றுக்குக் காரீயக் கவசங்கள் இட்டதுடன், மேலும் பாதுகாப்பாக நிலையத்தைச் சுற்றிலும் நூற்று இருபது கிலோ மீட்டர் விட்ட வட்டத்துக்குட்பட்ட பிரதேசத்தை மனித சஞ்சாரமே அனுமதிக்கப்படாத பாதுகாவல் பரப்பு ஆக்கி அரசு உத்தரவிட்டிருந்தது. அந்த நிலையப் பகுதிக்குப் போய்விடலாம் என்பதே சூரியாவின் திட்டம்.

**ப**ன்னிரண்டாம் மாதம், இருபத்தி நான்காவது நாள். அன்று அவர்கள் கிளம்பிப் போனார்கள். சேதமுற்ற அணு நிலையத்துக்கு நெருங்கிய கடைசி ஊர் வரை ரயிலில் போய் அங்கிருந்து சமுதாயக் கார்கள் நிற்கும் நிலையத்திலிருந்து ஒரு மின்சாரக் காரை எடுத்துக் கொண்டு சூரியாவும் நீலாவும் போனது யார் கண்களிலும் படவில்லை. அன்புடன் வாழ்ந்த ஜோடியர் பலர் இம்மாதிரி, பிரிவதற்கு முந்தைய நாள் விடுமுறைப் பயணங்கள் சென்று மாலையில் மீள்வது சகஜம்.

புதர் மண்டிவிட்டிருந்த பாதையில் நீலா காரை அணு நிலையத்தை நோக்கிப் போகும் திசையில் திருப்பியபோது, எதிரே ஓர் இடத்தில் பெரிய கனத்த இரும்புக் கதவுகள் பொருத்திய 'கேட்' ஒன்று மூடியிருந்தது. ''அபாயம். கதிரியக்கம் மிகுந்த பிரதேசம். யாரும் உள்ளே வரக் கூடாது! அரசு உத்தரவு'' என்று தெரிவித்த சிவப்பு எழுத்துகள் எச்சரிக்கைப் பலகையில் இருந்தன.

''இப்போது என்ன?'' என்று கேட்டாள் நீலா.

நீலாவை அகற்றிவிட்டு சூரியா ஓட்டுமிடத்தில் அமர்ந்தான். காரைப் பின்புறமாக எடுத்துச் சென்று பாதையிலிருந்து விலகி, கேட்டுக்கு இடப்புறம் நூறு மீட்டர் தள்ளிய ஓரிடத்தில் வேகமாக வந்து அங்கிருந்த கம்பி பின்னிய வேலியில் காரை மோதினான். அதிக இடரின்றி அவர்கள் உள்ளே வந்து விட்டார்கள். உள்ளே மீண்டும் காரைப் பாதைக்குக் கொண்டு வந்தார்கள். சூரியா தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். காலை பதினொரு மணி.

''நம் புது வாழ்வு தொடங்கி விட்டது, கண்ணே!'' என்று சொல்லி நீலாவை அணைத்

---

**இ**றைவனைப் புகழ்ந்து துதித்து எத்தனை எத்தனையோ பக்தர்கள் பாடல்கள் இயற்றியிருக்கிறார்கள். ஆனால் அப்பாடல்களை யாரும் திருப்புகழ் என்று சொல்லுவதில்லை. முருகப் பெருமானை அருணகிரிநாதர் புகழ்ந்து பாடிய பாடல்களைத்தான் ''திருப்புகழ்'' என்று தமிழ்கூறும் நல்லுலகம் முழுவதும் கொண்டாடிப் புகழ்கிறது. இத்தகைய தெய்விகப் புகழ் அவருக்கும் அவரது தெய்விகப் பாடல்களுக்கும் எப்படிக் கிடைத்தது? அவர் முருகப் பெருமானை நோக்கி ''ஆடும் பரி, வேல், அணி சேவல் எனப் பாடும் பணியே பணியா அருள்வாய்'' என்று மனமுருகி வேண்டினார். வெற்றி வேற் பெருமான் அவர் பிரார்த்தனையை ஏற்று, தமது திருக்கையில் உள்ள வேலாயுதத்தினால், அருணகிரிநாதரின் திருநாவில் மந்திரங்களுக்கெல்லாம் மகா மந்திரமான பிரணவத்தை எழுதினார். அவ்வளவுதான். அருணகிரியின் வாக்கில் தெய்வ மணம் கமழலாயிற்று.

இந்தத் தெய்விக வரலாற்று நிகழ்ச்சியை நம் ஓவியர் வினு வண்ணப் படமாக வரைந்திருக்கிறார். அருணகிரிநாதரின் ஆறுவது நூற்றாண்டு பிறக்கும் தருணத்தில், இந்த ஓவியத்தை அட்டைப்படமாக வெளியிட்டு வணங்குகிறோம்.

அட்டைப்பட விளக்கம்

## பாடும் பணி



## அதற்கும் ஒரு கைடு!

கர்நாடக மாநில சாலைப் போக்குவரத்து இலாகா, எழுத்தர், கணக்கர் ஆகிய வேலைகளுக்கு 135 பேர் தேவை என்று விளம்பரம் செய்தது! அதற்கு 75000 விண்ணப்பங்கள் வந்தன! இவற்றிலிருந்து தகுதியானவர்களைத் தேர்ந்தெடுப்பதற்குப் பரீட்சை நடத்தப் போகிறார்கள்! இதைத் தெரிந்து கொண்ட சமயோசித வியாபாரி ஒருவர் அந்தப் பரீட்சைக்குத் தேவையான கேள்வி-பதில் அடங்கிய ஒரு 'கைடு' புத்தகம் பிரசுரித்து விற்பனை செய்கிறார்! ஒரு புத்தகத்தின் விலை ரூ. 10.

''டெக்கான் ஹெரால்ட்''—அனிதா ராமச்சந்திரன்

---

துக்கொண்டான், அவன். அவள் கண்களில் நீர் ததும்பியது.

மனித நடமாட்டம் அற்றுக் காடாகிப் போன பகுதியில் சுமார் முப்பது கிலோ மீட்டர் தூரம் உள்ளே சென்று ஒரு பெரிய கட்டிடத்தை அடைந்தனர் சூரியாவும் நீலாவும். அது அந்த நிலையத்தில் வேலை செய்தவர்கள் தங்குவதற்காகக் கட்டப்பட்டிருக்க வேண்டும். இரவு அங்கே வசதியாகத் தங்கிக் கொள்ளலாம் என்று முடிவு செய்தார்கள்.

''நிலையத்தையும் பார்த்து விட்டு வருவோம், வா'' என்று சூரியா நீலாவை அழைத்தான்.

''அபாயம் ஒன்றும் வராதே, சூரியா?''

''ஒன்றும் பயப்படாதே, நாம் இனி சுதந்திரப் பறவைகள்!'' என்று அவள் முதுகில் உற்சாகமாகத் தட்டினான் அவன்.

நீலாவுக்கும் சூரியாவுடன் இங்கே இப்படி இருப்பது கவலைகளையெல்லாம் மறந்த ஓர் உற்சாகக் களிப்பைத் தந்தது.

சீக்கிரமே நிலையத்தை அடைந்தார்கள். உள்ளே எங்கும் சிலந்தி வலையும் தூசும் தும்புமாக இருந்தது. வௌவால்கள் இருட்டில் பறந்தன. தரை பல இடங்களில் பாளம் பாளமாகப் பெயர்ந்திருந்தது. எங்கும் விபத்தின் சேதங்கள் தெரிந்தன. தரையில் கிறல்களில் வேர் விட்டுப் பசுந் தழைக் கொடிகளும் செடிகளும் முளைத்திருந்தன.

''இவை, இந்தச் செடிகள், வௌவால்கள் எல்லாம் உனக்கு என்ன சொல்கின்றன நீலா?'' என்று கேட்டான் சூரியா.

''எனக்குத் தெரியவில்லையே!'' என்றாள் அவள்.

''நம்பிக்கை நீலா, நம்பிக்கை! இவையெல்லாம் நாம் இங்கே நன்கு வாழ்வோம் என்பதை உறுதியாகக் காட்டுகின்றன. இங்கே உயிரினம் வளர்கிறது. கதிரியக்கம் அடங்கி விட்டது!''

அங்குமிங்குமாக நடந்தார்கள் அவர்கள். இயந்திர அமைப்புக்களினூடே கண்ணாமூச்சி விளையாடினார்கள். ''நமக்கு வேண்டாம் இது. நம் குழந்தைகள் வரட்டும்'' என்றாள் நீலா. சூரியா சிரித்தான். அவளும் சிரித்தாள்.

அவர்கள் சிரிப்புச் சத்தத்துடன் சேர்ந்து தொலைவில் ஓர் ஒலி கேட்டது. அவர்கள் சிரிப்பு அடங்கியதும் அது தனித்து, பெரிதாக நெருங்கி வரும் பாவனையில் கேட்டது.

போலீஸ் ''செக்யூரிட்டி'' வண்டியின் ''சைரன்'' அலறல் அது.

நொடியில் சூரியா, அவர்கள் நிலையை நிதானித்து விட்டான். ''நம்மைக் கண்டுபிடித்து விட்டார்கள்!'' என்றான். நீலா அவனைப் பார்த்தாள். அவள் உடல் நடுங்கியது. அவன் அவளை அணைத்துக் கொண்டான். அவர்கள் இருந்த இடத்தின் உள்ளேயே எங்காவது ஒளிந்து கொள்ள முடியுமா என்று சூரியா கண்ணால் ஆராய்ந்தான்.

வெளியே வரிசையாக மூன்று போலீஸ் கார்கள் வந்து சேர்ந்து விட்டன. கதிரியக்கம் படாதிருக்கக் காரீய ''லைனிங்'' போட்ட உடைகள், முகமூடிகள், கையுறைகள் அணிந்த ஆட்கள் இறங்கிப் பூ ஒன்று விரிந்து படர்வது போலச் சுற்றும் நகர்ந்தார்கள்.

''உள்ளே இருப்பது யாரானாலும் உடனே வெளியே வாருங்கள், இது போலீஸ் உத்தரவு!'' என்று போலீஸ் செக்யூரிட்டிக் கண்ட்ரோலர் கை ஒலிபெருக்கியில் அறிவித்தார்.

''கதிரியக்கத்தினால் உங்களுக்கு விநாடிக்கு விநாடி ஊறு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. வெளியே வாருங்கள்'' என்று மேலும் இரண்டு முறைகள் சொல்லிப் பார்த்தார் செக்யூரிட்டிக் கண்ட்ரோலர். அதுவும் பயனளிக்காது போனதும், ''இப்போது நான் ஒன்று முதல் பத்து வரை எண்ணுவேன். எண்ணி முடிப்பதற்குள் நீங்கள் வெளியே வராவிட்டால் உள்ளே விஷ வாயுக் குண்டு வீசப்படும். இது வெறும் பயமுறுத்தல் இல்லை. கடைசி எச்சரிக்கை!'' என்று தெளிவாக அறிவித்துவிட்டு எண்ணத் தொடங்கினார்.

''ஒன்று... இரண்டு... மூன்று....'' செக்யூரிட்டி ஆபீஸர் எண்ணிக்கொண்டே போனார்.

அவள் அவனைக் கட்டிக் கொண்டாள். கால் முன் விரல்களில் எம்பி நின்று அவன் இதழ்களின் மீது தன் இதழ்களைப் பதித்தாள். அவன் தன் தலையைக் குனிந்து அவளுக்கு உதவினான். அவன் தன் இரு கரங்களால் அவளை அரவணைத்துக்கொண்டான். அதற்கு மேல் கண்ட்ரோலர் எண்களைப் பத்துவரை எண்ணியதோ, அவர் எண்ணி முடித்த ஐந்தாவது விநாடியில் குண்டு விழுந்து ''டமீர்'' என்று வெடித்ததோ, எதுவுமே அவர்களுக்குக் கேட்கவில்லை.

விஷப் புகை எல்லாம் அடங்கிக் காற்றில் கலந்த பின்னர், எல்லாம் வல்ல சமுதாயத்தின் பிரதிநிதிகள் உள்ளே வந்தனர். பரிசோதனை அறையில் ஒன்றுடன் ஒன்று பின்னித் துவண்டு கிடந்த உடல்களைக் கண்டனர். சார்ஜண்ட் ஒருவன் கீழே மண்டியிட்டு உட்கார்ந்து சூரியாவையும் நீலாவையும் பிரித்து நேராக்க முயன்றான். அவனால் முடியவில்லை.

கண்ட்ரோலர் அவனைப் பார்த்தார். ''ஹூம் மற்றொரு பிரிக்க முடியாத காதல் ஜோடியா! எப்போதும் எந்த சமுதாயத்திலும் உள்ளவர்கள்! கிடக்கட்டும் அப்படியே, விடு அவர்களை!'' என்றார்.

சார்ஜண்ட் மெல்ல எழுந்தான். கண்ட்ரோலரைப் பார்த்தான். இளம் வயதினன் அவன். கண்களில் அவனையும் அறியாமல் நீர் எழுந்து திரையிட்டது.

ஆசார்யாள் பேசுவது அத்தனையும் சத்தியத்தில் ஆழ்ந்து தோய்ந்து வரும் வார்த்தைகள்; அன்பில் நனைந்து ஊறி வரும் அமுதத் திவலைகள். அதனால்தான் எந்த சண்டப் பிரசண்டமான சொற்பொழிவினாலும் இயலாத அளவுக்கு, அவர் சாதாரணப் பேச்சு மொழியில் செய்கிற உபந்நியாசங்களே நமது இதயத்தின் அடி ஆழத்துக்கு நேரே பாய்ந்து விடுகின்றன. மேருவென உயர்ந்த தத்துவங்களையும் எளியதில் எளியதாக்கிப் பிட்டுப் பிட்டுத் தரும் ரஸவாதம் காஞ்சி முனிவருக்கே கைவந்த கலை. சொல்லும், சொற்பொருளும் ஒரு பக்கம் இருக்கட்டும். அந்தக் குரல் ஒலியைச் சொல்லுங்கள். அதனுள் எப்போதும் தெய்வமாக் கருணையின் நோவு குமுறும் என்று ஸ்ரீ கே. எஸ். வேங்கடரமணி எழுதினார். நோவு மட்டுமல்ல, நோவை எல்லாம் தீர்க்கும் ஆனந்தமும் அதில் குமிழிடும். அவர்களின் சிரிப்பொலி உண்டே, கர்ணாம்ருதம் தான்! சிரித்துப் புரமெரிப்பது போல்,

# குருவின் குரல்......

நொந்து அழ வேண்டிய விஷயத்தை எல்லாம் நகைத்துச் சொல்லி விடுவார்!

கொலம்பியா இசைத்தட்டு நிறுவனத்தார் எதிர்காலத்துக்கெல்லாம் மூலதனமாக ஒரு புதையலைத் தந்து விட்டார்கள்.

ஸ்ரீ பெரியவாளின் குரலை, சிரிப்பை, சொல்லை, பொருளை வீட்டுக்கு வீடு கேட்டு இன்பமும் இகபர நலனும் பெற உதவுகிறது. சமீபத்தில் கொலம்பியா கம்பெனியார் வெளியிட்டுள்ள காஞ்சி முனிவரின் "இசைத் தட்டு, 'இசைத்தட்டு' என்று தான் விளம்பரப்படுத்தியிருக்கிறார்கள்! உண்மையிலேயே "பேச்சு"த் தட்டு என்று சொல்ல வேண்டாம். இங்கே கேட்கும் சத்தியத்தையும் அன்பையும் விடப் பெரிய இசை ஒன்று உண்டா என்ன?

ஒரு பக்கத்தில் காமாக்ஷி கடாக்ஷச் சிறப்புப் பற்றிய உரை. அந்தக் கடாக்ஷ வைபவத்தால் சமத்துவத்தையும், சர்வஜன தயையையும், சகல இந்திரிய நிக்கிரகத்தையும் பெற்ற விக்கிரகமே இவற்றை விளக்குகிறார். ஆஹா, அநுபவ சக்தியில் ஒளிவிடும் வாக்கு விசேஷமே விசேஷம்.

பின்பக்கத்தில், பாரத நாவாய் வளர்த்த பாரதப் பண்பை விளக்குகிறார். இன்று அப்பண்புகள் சிதைந்து போனதில் புண்கொண்ட உள்ளத்தோடு ஒரு சிரிப்புச் சிரிக்கிறாரே, அது எந்த நெஞ்சையும் உருக்கி விடும். இதே பக்கத்தில் பகவந்நாமம் என்கிற பரம சுலபமான மார்க்கத்தால் பரதத்துவத்தை அடைவதைப் பற்றிய அருள்வாக்கும் மலர்கிறது. 'நாக்கு இருக்கிறது, நாமம் இருக்கிறது, பயமேன்?' என்ற வாக்கு அபய கீதமாகச் செவியில் ரீங்காரமிட்டுக் கொண்டே யிருக்கிறது.

பெரியவர்கள் முன்பு பல சந்தர்ப்பங்களில் நிகழ்த்திய உரைகளிலிருந்து இத் தொகுப்பைச் செய்துள்ள பரணீதரன் ஆஸ்திகர் அனைவரின் நன்றிக்குப் பாத்திரராகிறார்.

—ரா. கணபதி





# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 54. குற்றாலம்

ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
—குற்றாலக் குறவஞ்சி

அதனைக் கண்டு —
பொங்கக் காண்பது கற்பனை உள்ளம்

குற்றாலம் போய் வந்தவர்களுக்குப் "பொங்குமாங் கடல்" எது என்பது தெரியும். பொதுவாகப் பலரும் நீராடும் வட அருவி, உயரே எந்தப் பாறைப் பள்ளத்தில் விழுந்து, பொங்கிப் புரண்டு பொழிகிறதோ, அந்தப் பள்ளந்தான் பொங்குமாங்கடல்.

அந்தப் பொங்குமாங் கடலை இறுதிக் களமாகவும் தலைப்பாகவும் கொண்ட கதை ஒன்றை கல்கி எழுதியிருக்கிறார்.

கப்பலோட்டிய தமிழர் சிதம்பரம் பிள்ளை சிறையில் செக்கிழுத்துத் துன்புற்றிருக்கையில், வன்முறைப் போராட்டத்தில் நம்பிக்கை கொண்ட தேச பக்தர்கள் சிலர், வெள்ளைக்காரர்களைக் கொன்று மாய்ப்பதற்காக, யோகி நீலகண்ட பிரம்மசாரியின் தலைமையில் சதித் திட்டம் போட்டார்கள். அவர்களில் ஒருவரான வாஞ்சி ஐயர், மணியாச்சி ரயில் சந்திப்பில், கலெக்டர் ஆஷ் துரையைத் துப்பாக்கியால் சுட்டார்; சுட்டுவிட்டுத் தம்மைத் தாமே சுட்டுக் கொண்டு பிராணத் தியாகம் செய்தார்.

நாடெங்கும் மிக்க பரபரப்பை ஊட்டிய இச் செய்தியை, அப்போது பன்னிரண்டு வயதுச் சிறுவனாய் இருந்த கல்கி அறிந்ததும் விதம்வித உணர்ச்சிகளுக்கு உள்ளாகியிருப்பார். பத்தாவது வயதிலேயே பாரதியாரின் பாடல்களின் மூலம் அவருடைய மனத்தில் பொங்கி நின்ற தேசபக்தி மேலும் பொங்கியிருக்கும். பின்னால் மகாத்மா காந்தியின் அஹிம்ஸா நெறியில் நம்பிக்கை கொண்ட காரணத்தால், வாஞ்சி ஐயரின் செயலை அவர் மனம் தகாததெனக் கருதியிருக்கும்; ஆனால் அதே சமயம், அவருடைய தைரியத்தையும் தியாகத்தையும் பாராட்டியும் இருக்கும். அந்த விதவித உணர்ச்சிகள் எல்லாம், பல ஆண்டுகளாய்க் கல்கியின் படைப்பு மனத்தில் சுழன்று சுழன்று, நம் நாட்டில் சுதந்திர ஆனந்தம் பொங்கிய 1947ம் ஆண்டில், அந்தக் கதையிலே பொங்கி வந்தன.

அந்த வருடத்துக் கல்கி பொங்கல் மலரில் வெளியான அக்கதை, குற்றால மலையின் அடிவாரத்திலிருந்து அழகான வர்ணனையுடன் நிதானமாய் மேலே ஏறுகிறது. பின்னர் மர்மத்தையும்



வட அருவி உயரே எந்தப் பாறைப் பள்ளத்தில் விழுந்து பொங்கிப் புரண்டு பொழிகிறதோ அந்தப் பள்ளம்தான் பொங்குமாங்கடல்.





குற்றாலச் சூழலில் பிறந்த கதைகள் பொங்குமாங்கடல், காதலுக் கள்ளன், புன்னைவனத்துப் புலி, சோலைமலை இளவரசி

ஆலையும் தாண்டிவிட்டுத் தடதட வெனக் கீழே இறங்கி, தூத்துக்குடி கடலோரத்துக்கு ஓடுகிறது. அங்கிருந்து சுதந்திரக் கனல் வெறியுடன் குற்றாலத்துக்கே திரும்பி, பரபரப்புடன் மலைமேல் ஏறுகிறது. செண்பகாதேவியில் ஒரு தட்டைப் பாறையை அணுகி, அங்கே புரட்சி வீரர்கள் காளியின் முன்னிலையில், கைவிரலை வெட்டிய உதிரத்தால் பிரமாணப் பத்திரத்தில் ஒப்பம் இடும் காட்சியைச் சுற்றுகிறது. மறுபடியும் கீழ் நோக்கிக் கலவரத்துடன் இறங்கி, அந்தத் தேச பக்தர்களைக் காட்டிக் கொடுத்த துரோகி பொங்குமாங்கடலில் தத்தளிப்பதையும், பின்னர் கரையிலே குற்றுயிராய்க் கிடப்பதையும் காட்டுகிறது. இறுதியில், காட்டிக் கொடுத்த அந்தத் துரோகியையே இன்னொர் எனக் காட்டிக் கொடுத்து விட்டு முடிகிறது.

''பொங்குமாங் கடல்'' கதை வெளியான அதே சுதந்திர ஆனந்த ஆண்டில், பிரிட்டிஷ் ஆட்சியின் தொடக்க காலத்தையும் முடிவு காலத்தையும் இணைத்துச் சொல்வதான ''சோலைமலை இளவரசி'' ஒரு நெடுங்கதையாக, கல்கியின் ஜனவரி 12ம் தேதி இதழில் ஆரம்பமாயிற்று. கல்கியின் அந்தத் தொடர் கதையும், குற்றாலம் அமைந்துள்ள அதே மேற்குத் தொடர்ச்சி மலையையொட்டியே நிகழ்வது. அவருடைய ''புன்னைவனத்துப் புலி'' பாய்ந்து ஓடுவதும் ''காதலுக்! கள்ளன்'' சுற்றுவதும் அங்கேதான்.

இந்தக் கதைகளில் வரும் காட்சிகளையும் உரையாடல்களையும் கவனிக்கும் திருநெல்வேலிக்காரர்கள், ''நம்ம பக்கத்து எடங்களை இவுக எம்புட்டு அழகா வர்ணிக்கிறாக, நம்ம சீமைப் பேச்சை எம்புட்டு நல்லா சொல்லுதாக'' என்று வியக்கிறார்கள். வியக்க வேண்டியது தான்; ஆனால், டி.கே.சி.யின் தோழமையினால், திருநெல்வேலிச் சீமையில் கல்கி, எத்தனை தரம் எத்தனை நாள் தங்கியும் சுற்றியும் எல்லாவற்றையும் நன்றாகக் காணவும் கேட்கவும் கொடுத்து வைத்திருந்தார் என்பதை எண்ணுகையில், வியக்க வேண்டியதில்லை.

கதைகளிலே கல்கி இழைத்துள்ள குற்றால வர்ணனைகள் இருக்கட்டும். கட்டுரை ஒன்றில், தம் அனுபவமாகக் குற்றால அருவியையும் அதில் குளிக்கும் சுகத்தையும் அவர் வர்ணித்துச் சொல்வதைக் கொஞ்சம் பார்ப்போம் :

நிலவு வெளிச்சத்தில் தூரத்தில் நின்று அருவியைப் பார்த்தால், அது நீரருவியாகத் தோன்றாது — பாலருவியாகவே தோன்றும். அருகில் சென்று பார்த்தாலோ, கோடி கோடியான வெண் முத்துக்களும் வைரக் கற்களும் வர்ஷிப்பதாகக் காணப்படும்.

வெயில் எரிக்கும்போது அருவிக்கரையில் தோன்றும் வான வில்களின் காட்சியை நினைத்தாலும் மயிர் சிலிர்க்கும்...

அருவியில் குளிப்பது ஒரு பெரிய சுகந்தான் ; சந்தேகம் இல்லை. அருவியின் கிட்டப் போகும் வரையில் குளிரும். ''போயும் போயும் இதிலே என்னத்துக்காகக் குளிக்க வேண்டும்? இந்த ஜலத்தில் ஒரு குடம் பிடித்துக் கொண்டு போய் வீட்டில் வெந்நீர் போட்டுக் குளிக்கலாம்'' என்று தோன்றும். ஆனால் அருவியில் தலையை நீட்ட வேண்டியதுதான்; குளிர் பறந்து போகும். அரை

ஓவியவற்றுக்குர் சந்திரா படங்கள். கல்கியின் படைப்பு மன இயக்கத்துக்கு அவருடைய குற்றால வாசமும் அனுபவங்களும் உதவின.





ரசிகமணி, கல்கி ஆகியோருக்குப் பிரானல் நண்பர் விட்டலபுரம் வேங்கடாச்சாரி, அவர் அருகே டி.கே.சி.யின் பேரன் தீப. நடராஜன்.



நிமிஷத்துக்கெல்லாம் உடம்பு கதகதவென்று ஆகிவிடும். (ஆ. வி. 1-10-39)

தண்ணீர் அருவியை அனுபவிப்பதற்கு மட்டும் என்றால், நாலைந்து தரந்தான் கல்கி போயிருப்பார் குற்றாலத்துக்கு. ஆனால், சிதம்பரநாதர் என்ற வள்ளல், ரசிகமணி என்ற கொண்டல், அன்புப் பால் அருவியையும் தமிழ்த் தேன் அருவியையும் பொழிந்து கொண்டிருந்ததால், அவற்றை அனுபவிப்பதற்காக, பதினைந்து ஆண்டுகளில் இருபது தடவைக்கு மேல் அங்கே போனார்.

முதல் முதலாகக் கல்கி குற்றாலத்துக்குப் போனது 1936ல்; மிக நெடுங் காலமாய், ஒரு மாதம் அங்கே தங்கி இருந்ததும் அப்போதுதான். தாம் மட்டும் அல்ல; அருந் தலைவர் ராஜாஜியுடன். அரசியல் அல்லல் காரணமாய் ராஜாஜி மனச்சோர்வு கொண்டிருந்த சமயம் அது; மனச் சோர்வுடன் உடல் சோர்வும் சேர்ந்து கொண்டது. அவருடைய ''கண்ணன் காட்டிய வழி'' நூலுக்கு, 26-4-36 ஆ. வி. இதழில் எழுதிய மதிப்புரையில் கல்கி சொன்னது போல், அவர் ''ஓயாமல் உழைத்து உழைத்துத் தேகம் மிகவும் பலஹீனமாகி விட்டது. அதை முன்னிட்டும், 'நம்மால்தான் உலகம் நடக்கிறது' என்று சாதாரணமாக அரசியல் தலைவர்களுக்கு உள்ள எண்ணம் இல்லாதபடியாலும், ஓய்வு எடுத்துக் கொள்ள முன்வந்தார்.''

மனச் சோர்வுக்கும் உடல் சோர்வுக்கும் குற்றாலத்தையும் டி.கே.சியின் விருந்தோம்பலையும்விடச் சிறந்த மருந்து ஏது?

முன்பு நீலகிரியிலிருந்து எழுதியது போலவே, குற்றாலத்திலிருந்தும் கல்கி தமது குடும்பத்துக்குக் கடிதங்கள் எழுதினார் — பின்னர் படித்துப் பார்க்கப் போகிற குழந்தை ஆனந்திக்கு. அவற்றில் முதல் இரண்டிலிருந்து சிறு பகுதிகள்:

(1-2-36) இந்த ஊரைச் சுற்றி எங்கே பார்த்தாலும் மலைகள் இருக்கின்றன. மலைகளில் அங்கங்கே அருவிகள் விழுந்து கொண்டிருக்கின்றன. அதாவது 'சோ' என்று ஜலம் கொட்டுகிறது. இந்த மாதிரிப் பல இடங்களில் உயரத்திலிருந்து பள்ளத்தில் அருவி விழுகிறது. இதனால் எப்போதும் சலங்கை சப்தத்தைப் போல் 'சலசல' வென்று சப்தம் கேட்டுக்கொண்டே இருக்கிறது.

தினந்தோறும் நானும் (ராஜாஜி) அண்ணாவும் மற்றவர்களும் காலையில் தோசை, காப்பி சாப்பிட்டதும் கிளம்பி மலையில் ஏறிப் போகிறோம். இதுவரை தினம் ஒரு புதிய இடத்துக்குப் போய் வந்தோம். சாயங் காலந்தான் திரும்புவோம்.....

(2-2-36) நாங்கள் முந்தா நாள் ''ஐந்தலை அருவி'' என்னும் இடத்துக்குப் போயிருந்தோம். அங்கே மழை காலத்தில் ஐந்து அருவிகள் தனித்தனியே மலையிலிருந்து கீழே விழுமாம். இப்போது கோடைகால மாதலால் ஓர் அருவிதான் விழுகிறது. அதில் உட்கார்ந்து ஸ்நானம் செய்தோம். அதற்கு அருகில் ஒரு சின்னக் குளம் இருக்கிறது. அதில் நீந்தினோம்.

அந்த இடம் அண்ணாவுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. ஆகையால் அங்கேயே ஓர் ஆசிரமம் கட்டிக்கொண்டு இருந்து விடுகிறேன் என்று சொன்னார்.

இப்படியான இயற்கையின் தோழமையுடன் டி. கே. சி.யின் இலக்கியத் தோழமை; அவர் அன்புடன் அழைத்துச் சேர்க்கும் வட்டத்தொட்டி. அன்பர்களின் தோழமையும் கூடத்தான். அருவிக்கரை, புனலோரப் பாறை, புல்தரை, மரநிழல், வீட்டுத் திண்ணையென்று விதவிதமான இடங்களில் பேச்சுக் கச்சேரி நடைபெறும். கம்பன் கவிதை, முத்தொள்ளாயிரப் பாடல்கள் என்றால், டி.கே.சி.யே ஏகபோகமாய்ப் பாடிப் பேசி மகிழ்விப்பார். திருக்குறள் என்றால், தனிப் பேச்சுக்குப் பதிலாகக் கலந்துரையாடல். ஒரு குறளுக்கு ரசிகமணி பொருள் சொல்லுவார். அதைக்கேட்டுக் கல்கி, அதன் தொடர்பாகத் தமக்கு இன்னொரு குறள் நினைவுக்கு வருவதாகக் கூறுவார். அது என்ன குறள் என்பதை, அவருக்கு முந்தி ராஜாஜி ஊகித்துச் சொல்லி விடுவார்.

டி.கே.சி.க்கு உடன்பாடு அல்லாத குறள் ஒன்று உண்டு.

**''செவிக்கு உணவு இல்லாதபோழ்து சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்''**

என்ற குறள்தான் அது. இதற்கு நேர் மாறாகத்தான் டி.கே.சி. செய்வார். முதலில் வயிற்றுக்கு உணவு; பிறகுதான் செவிக்கு உணவு. வயிற்றுக்கு உணவு என்றால் எப்பேர்ப்பட்ட உணவு! எப்பேர்ப்பட்ட உபசாரம்! ''ரஸிகமணி டி.கே.சி.'' என்ற பெயருடன் பாஸ்கரத் தொண்டைமான் எழுதியுள்ள வாழ்க்கை வரலாற்றில், அவருடைய விருந்தோம்பலுக்கென்றே தனியாக ஓர் அத்தியாயம் இருக்கிறது என்றால்!

அடையாத வாயில் அகமாக இருந்த டி.கே.சி.யின் இல்லத்தில், அணையாத மந்திரஜால அடுப்பு இருந்ததோ, அல்

---

**இதோ ஓர் உபாயம்!**



ஸ்க்ரூ ஆணிகளை டப்பாக்களில் போட்டு வைப்பதைவிட ஒரு சோப்புக்கட்டியில் செருகி வைத்தால் அவற்றைப் பிறகு ஸ்க்ரூ செய்வது எளிதாக இருக்கும். ஸ்க்ரூ ஆணியில் ஒட்டிக் கொண்டிருக்கும் சோப்புத் துகள்கள் எளிதில் மரத்தில் புக உதவுவதுடன் ஸ்க்ரூ ஆணிகள் துருப்பிடிக்காமல் காக்கும்! -பி. எஸ்.

"எனக்கு எப்படித் தெரியும், எனக்கு எத்தனை கப்பல்கள் சொந்தம் என்று? வேறு வேலை எதுவுமின்றி நான் அமைதியாக உட்கார்ந்து அவைகளை எண்ணிக் கொண்டிருப்பேன் என்று எண்ணினீர்களா?"

சொன்னது : ஓனாஸிஸ் —சேலம் தர்மசக்ரா



லது அட்சய பாத்திரமேதான் இருந்ததோ! எந்த வேளையில் எத்தனை பேர் வந்தாலும், அந்த வேளைக்கு ஏற்ப அத்தனை பேருக்கும் காப்பியோ, பலகாரமோ, சாப்பாடோ வந்துவிடும். சமைத்த பதார்த்தங்கள் எல்லாம் அதனதன் இயற்கை ருசியுடனும் மணத்துடனும் இருக்கும். அந்த வீட்டுத் தோசை இருக்கிறதே, அதற்கு ஈடானது வேறில்லை. அதற்கு உபயோகமாவது குண்டைவாளை என்ற ஒரு தனியான அரிசி; அதை அரைப்பதற்கென்று தனியானதோர் ஆட்டுரல். முழுமதி வண்ணமாக, வெண்ணெய் மெதுப் பக்குவமாக தோசையை வார்த்து எடுப்பதும் தனியானதொரு கலைதான்; அந்தக் கலையில் தேர்ந்தவர், ரசிகமணியின் துணைவியார் பிச்சம்மாள் அம்மணி. வண்ண வண்ணப் பாடல்களைக் கணவர் வாய் ஓயாமல் பாடிக் காட்டிக் கொண்டே இருப்பதற்கு ஈடாக, வட்டு வட்டான தோசைகளை மனைவியார் கை ஓயாமல் வார்த்துப் போட்டுக் கொண்டே யிருப்பார்.

இங்கிதமாய் விசாரித்தும் உபசரித்தும், வயிற்றுக்கு நிறைவாகப் பாந்தமாய்ப் பரிமாறுவதில் அந்த வீட்டுப் பெண்டுகளும் தவசுப் பிள்ளைகளும் தேர்ந்தவர்கள்தான். ஆனால் விருந்தோம்பல் என்பது வயிற்றை நிரப்புவது மட்டும் அல்ல; நெஞ்சை நிறைப்பதுமாகும். வந்த விருந்தாளி யாராய் இருந்தாலும், அவரை மிக மிக வேண்டியவராகக் கருதி வரவேற்று, தனி அன்புக்கும் மரியாதைக்கும் உரியவராக நடத்தி, அவருடன் பிரியமாய்ப் பேசிப் பழகுவதுமாகும். இவ்வித விருந்தோம்பலை அந்தக் குடும்பத் தலைவரும் தலைவியும் சிறப்புப் பண்பாகக் கொண்டிருந்தார்கள்; குமாரர் செல்லையாவும் அவருடைய துணைவி முத்தம்மாளும் கொண்டிருந்தார்கள்; பேரன் நடராஜனும் பேத்தி தங்கம்மாளும் கொண்டிருந்தார்கள்.

ரசிகமணியின் செயலாளராகவும் சீடராகவும், குடும்பத்தில் ஒருவராகவும் இருந்த எஸ்.வி.எஸ்; அதே விதமாய்ப் பின்னர் இருந்த ராஜபாளையம் பலராம ராஜா; குழந்தைப் பருவம் முதல் அந்த வீட்டுக் குழந்தைகளுடன் ஓடியாடி விளையாடி, பள்ளி விடுமுறைகளில் குற்றாலம் வந்துபோன பி.எஸ். மணி — இவர்கள் மூவரும் அந்த வீட்டாருக்கு ஒப்பாக விருந்தோம்பல் செய்து, விருந்தாளிகளின் பாராட்டுக்கும் நட்புக்கும் உரியவரானார்கள்.

முதன் முதலாகக் குற்றாலத்தில் டி.கே.சி.யின் விருந்தாளிகளாய் இருந்தவர்கள் ராஜாஜியும் கல்கியுந்தான். அவர்களுடைய அந்த முதல் விருந்தாடலின்போதே, டி.கே.சி.யின் அழைப்பின் பேரில் "ஹரிஜன்" சாஸ்திரி தம்பதியரும் சென்னையிலிருந்து வந்து சேர்ந்தார்கள். பிறகு, செல்லையா உட்பட, ஆறு பேர்களும், பி.ஸ்ரீ. ஆச்சாரியாளின் அழைப்பிற்கிணங்க, ஸ்ரீவைகுண்டம் தாலுகாவிலுள்ள அவருடைய சொந்தக் கிராமமான விட்டலபுரத்துக்குச் சென்றார்கள். அங்கே பி.ஸ்ரீ., சீதாராம மூப்பனாரின் மேலூர் தோட்ட வீட்டில் அவர்களுக்கு ஜாகை ஏற்பாடு செய்திருந்தார். அவரும் மூப்பனாரும், தாங்களும் விருந்தோம்பலில் தேர்ந்தவர்களே என்பதைத் தென்னையும் மாவும் நிறைந்த அந்தத் தோட்டத்தில் காட்டினார்கள். விருந்தாளிகளும் அவர்களைக் காணவும் கேட்கவும் வந்த உள்ளூர்க்காரர்களுமாய்ச் சேர்ந்து, ஒரே இலக்கியக் கொண்டாட்டமாய் இருந்தது.

அந்த ஊருக்கு ஒரு கல் தொலைவில் தான் சிற்பக் கலைக்குப் பேர்போன கிருஷ்ணாபுரம் இருக்கிறது. இலக்கிய ரசிகர்கள் கலா ரசிகர்களாய் மாறி, அங்கே சென்று, வேங்கடநாதன் கோயிலில் நாயக்கர் காலத்துச் சிற்பங்களைக் கண்டு மகிழ்ந்தார்கள். காவடி போல் பெண்ணைத் தோளில் தாங்கி ஓடும் வீரனும், அரசிளங் குமரனைச் சுமந்து நிற்கும் குறப் பெண்ணும், விந்தையான சிற்பங்களாய்க் கல்கிக்குத் தோன்றி இருக்கும்.

விட்டலபுரத்தில் கல்கிக்கும் மற்றவர்களுக்கும் அறிமுகமான உள்ளூர்க்காரர்களில், வேங்கடாச்சாரி என்ற இளைஞர் ஒருவர். பொருட் செல்வமும் கல்விச் செல்வமும் ஒருங்கே கொண்டவர் அவர்; வடமொழியிலும் தமிழ் மொழியிலும் நல்ல தேர்ச்சியுள்ளவர். தாம் எழுதுவதை எல்லாம் அவர் வரிவரியாய்ப் படிப்பவர் என்பதை அறிந்ததனால் கல்கியும், தமது ரசிகர் வட்டத்துக்கு மற்றோர் இளைஞர் கிடைத்தார் என்பதனால் டி.கே.சி.யும் மகிழ்ந்தார்கள்.

குற்றாலத்திலிருந்து வந்தவர்கள் அங்கேயே திரும்பிப் பின்னர் பிரிந்து சென்றார்கள். அடுத்த ஆண்டில் கல்கி, மனைவியுடனும் குழந்தைகளுடனும் குற்றாலத்தை அனுபவித்தார். அதற்கு அடுத்த வருடம், பிரதம மந்திரி ராஜாஜியுடனும் அவருடைய குமாரர் நரசிம்மனுடனும் குற்றாலவாசம். மறு

வருடம், அதாவது 1939ல், தனியாகவே கல்கி குற்றாலம் வந்து, டி. கே. சி யின் தோழமையை அனுபவித்தார். அந்த அனுபவத்துடன் மற்றொன்றும் சேர்ந்து கொண்டது: எந்தக் கவிமணியைக் ''கண்ணாரக் காண ஒரு கவிஞர்'' என்பதாக ரசிகமணி வர்ணித்துள்ளாரோ, அவரைத் தாமே கண்ணாரக் காண்பதற்காக, அப்படி வர்ணித்தவரின் துணையுடனேயே சென்றார் கல்கி.

குற்றாலம், அகஸ்தியரின் தமிழ்ப் பண்ணை வளர்ந்த இடமல்லவா? ஆகவே, அவ்விடத்தில் இருக்கும்போது, தமிழையும் தமிழ்க் கவிதைகளையும் பற்றி அடிக்கடி ஞாபகம் உண்டாயிற்று. அதன் பயனாக, ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளையைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பம் எழுந்தது. ''தற்சமயம் தமிழகத்திலுள்ள ஒரே கவி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளைதான்'' என்பது சிலருடைய அபிப்பிராயம். ''தமிழ் நாட்டில் தற்சமயம் உள்ள அநேக கவிகளில்—சுமார் இருநூறு முந்நூறு பேரில்—அவரும் ஒருவர்'' என்று வேறு சிலர் கருதுகிறார்கள். ஆனாலும், எல்லாரும் அவரை ஒரு கவி என்று ஒப்புக் கொள்கிறார்கள். அப்படிப்பட்டவர் சில காலமாக உடல் நோயினால் வருந்திக் கொண்டிருக்கிறார் என்று கேள்விப்பட்டிருந்தேன்.

ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை நாகர் கோவிலை அடுத்த புத்தேரி கிராமத்தில் ஒரு சின்னஞ் சிறு வீட்டில் இருக்கிறார். வீட்டுக்கு அப்பால் எங்கே பார்த்தாலும் நெல் வயல்; வீட்டுக்கு எதிரில் நெற்களம். அந்தப் பகுதிகளில் ஆகஸ்டு மாதம் அறுவடைக் காலமாதலால் களத்தில் போரடித்துக் கொண்டிருந்தார்கள். இப்படி இயற்கைக்கு மத்தியில் இயற்கையோடு ஒட்டி வாழும் தமிழ்க் கவியின் வீட்டில் சில மணி நேரம் தங்கி அவருடன் பேசிக் கொண்டிருந்தோம். (ஆ. வி. 1-10-39)

அந்தக் கவியின் இல்லத்தையும் அமைதியான புத்தேரி கிராமத்தையும் விட்டுக் காரில் திரும்புகையில், நாகர் கோவில் நகரம் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. தெருத் தெருவாய்ச் செய்தித் தாள்களுடன் மக்கள் கூடிக் கூடி நின்றும், பரபரப்பாய் அலைந்து கொண்டும் இருந்தார்கள். யுத்தம் மூண்டு விட்டது! பிரிட்டனும் ஃபிரான்சும் ஜெர்மனி மீது போர் தொடுத்து விட்ட செய்தி அன்று வந்திருந்தது.

அந்த யுத்தம் காரணமாய், உலக நிலைமையில், தேச நிலைமையில் பெரிய பெரிய மாறுதல்கள். கல்கியின் சொந்த வாழ்க்கையிலும் அப்படியே. அவற்றில் முக்கியமானவை, ஆனந்தவிகடனை விட்டு அவர் விலகி, சிறை புகுந்து, வெளியே வந்தபின் சொந்தப் பத்திரிகை தொடங்கியது முதலியன. அவற்றிற்கும் அவற்றைத் தொடர்ந்த நிகழ்ச்சிகளுக்கும் இடையே, குற்றாலம் போய் வருவதை அவர் நிறுத்திக் கொள்ளவில்லை; கூடுதலாகவே போய் வந்தார். அதை விடுமுறைத் தளமாக மட்டும் அல்லாமல், ஒருமுகாமாகவும் வைத்துக் கொண்டார்.

டி. கே. சி யும் 1941ன் தொடக்கத்திலிருந்து, குற்றாலத்தையே தமது நிலையான வசிப்பிடமாய்க் கொண்டு விட்டார். ஐந்தருவிச்சாலையில் அடுத்தடுத்து இரண்டு வீடுகளை எடுத்துக் கொண்டார் — ரசிகர்களுடன் அளவளாவுவதற்காக ஒன்று; மற்றொன்று விருந்தோம்பலுக்காக. கல்கி வரும்போதெல்லாம், அவர் குடும்பத்துடன் தங்குவதற்கும், அலுவல்களைக் கவனிப்பதற்கும், நண்பர்களைச் சந்திப்பதற்கும் வசதியாக, அதே சாலையில் தனி பங்களா ஒன்றை அமர்த்திக் கொடுப்பார்.

முதல் குற்றால வாசத்தின்போது கல்கிக்குக் கிடைத்த விட்டலபுரம் வேங்கடாச்சாரியின் நட்பு, ஆண்டுக்கு ஆண்டு வளர்ந்து, 1941க்குப் பிறகு, ஒன்றிய ஈடுபாடுகள் கொண்ட அன்னியோன்னிய நிலையை அடைந்தது. கல்கி சிறை புகுந்ததை அடுத்து வேங்கடாச்சாரியும் சிறை புகுந்தார். கல்கி ஈடுபட்ட ராஜாஜி பிரசாரம், தேர்தல் பிரசாரங்கள் முதலியவற்றில் அவரும் ஈடுபட்டார். தமிழிசை இயக்கத்தில் கலந்து கொண்டார்; ஹரிஜன ஆலயப் பிரவேசப் பயணங்களில் சேர்ந்து கொண்டார்; பாரதி மண்டபத் திருப்பணியில் பங்கு கொண்டார்.

வேங்கடாச்சாரிக்குக் கல்கி எழுதிய பல கடிதங்களில், குற்றாலத்திலிருந்து எழுதிய ஒன்று, அவர்களுடைய நட்பின் செறிவுக்கு நல்லதோர் எடுத்துக் காட்டாகிறது:

(4-3-47) அன்றிலைப் போல் சந்திரன் எப்போது உதயமாகும் என்று எதிர்பார்த்திருந்தவனுக்குச் சந்திரோதயத்தின் முன்னறிவிப்பு ஒளியைப் போல் தங்களுடைய கடிதம் வந்து குதூகலத்தை அளித்தது. ஏதோ மேக தூதம் என்ற நூலைப் பற்றிச் சொன்னீர்கள் அல்லவா? அதிலிருந்து மனத்திலே ஒரே கவிதையாய் உதித்துக் கொண்டிருக்கிறது. அதோடு இப்போதுதான் வெண்ணிலவில் பாலருவி

---



**சதுகை:** நம் நாட்டில் கண்ணொளி இழந்தவர்களுக்காக 'பிரெய்லி' எழுத்துக்களில் 1330 கதைப் புத்தகங்கள் அச்சிடப்பட்டுள்ளன. இந்தப் புத்தகங்களை ஓர் இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குத் தபாலில் அனுப்பினால் அதற்கு ஸ்டாம்பு ஒட்ட வேண்டாம்!

ஆதாரம்: 'டெக்கான் ஹெரால்ட்' தகவல்: அனிதா ராமச்சந்திரன்.

யாக ஜொலிக்கும் நீர் அருவியில் குளித்து விட்டு வந்தேன்....

தாங்கள் இங்கு இல்லாதபடியால் அருவி நீர் எல்லாம் வீணாய்ப் போகிறது. பத்திரிகைச் செய்திகள் எல்லாம் வீணாய்ப் போகின்றன. டி. கே. சி. வீட்டுச் சாப்பாடு அநியாயமாய் வீண் போகிறது. 'கவிதைத் தலைவி' யிடம் வேண்டிய விடைபெற்றுக் கொண்டு உடனே புறப்பட்டு வரவும்...

நேற்று இந்த ஊரில் எங்கேயோ புலி வந்ததாகப் பேசிக் கொண்டார்கள்...அதைப்பற்றிக் கேள்விப்பட்டதும் தங்களை நினைத்துக் கொண்டேன். தாங்கள் முன்னணியில் நிற்கும் போது எந்தப் புலி என்னை என்ன செய்து விடும் என்ற தைரியந்தான்.....

இந்தக் கடிதத்தில் கண்ட புலி தான், கற்பனை வனத்தில் இந்தாண்டு காலம் அலைந்து திரிந்து புன்னைவனத்துப் புலியாகப் பாய்ந்து வந்தது என்று சொன்னால், அதை ஏதோ, குருட்டான் போக்கான ஊகமாக எண்ண வேண்டாம். உண்மையில் கல்கி, அந்தக் கதையையும், குற்றாலச் சூழலில் எழுந்த பிற கதைகளையும், அவை மனத்திலே தோன்றி வளர்ந்து உருக்கொண்ட கட்டங்களிலேயே வேங்கடாச்சாரியிடம் கூறியிருக்கிறார்.

''புன்னைவனத்துப் புலி'' 1952 கல்கி தீபாவளி மலரில் வெளி வந்தது. அதைப் பற்றி டி.கே.சி.யின் பாராட்டு, ஆனந்திக்கு எழுதிய கடிதம் ஒன்றிலிருந்து :

(திருக்குற்றாலம் 9-10-'52) ஏதோ மலைக்குள்ளே காட்டில் விமானம் விழுந்து சேதம் ஏற்பட்டது. ஏற்பட்டால் நமக்கென்ன? தமிழுக்கு ஜோரான கதை கிடைத்து விட்டது. பலே ஷோக்கான பாத்திரங்கள். ஆனால் எல்லாரும் குற்றாலத்தைச் சுற்றியே வருகிறார்கள். புலியைக்கூடக் குற்றாலத்தில்த்தான் பிடித்து ஆகவேண்டியிருக்கிறது. கதையைப் பார்த்துவிட்டுத்தானே என்னவோ, ஒரு புலி சில நாளைக்கு முன் ஐந்தருவி ரோட்டுப் பக்கம் வந்து மூன்று மாடுகளைத் தீர்த்துவிட்டுப் போய்விட்டது...

கல்கியின் கதைகள் கட்டுரைகள் எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் படிப்பார் டி. கே. சி. படிப்பதோடு ஒவ்வொன்றையும் பாராட்டிக் கடிதம் எழுதுவார். கல்கிக்கே நேரில் எழுதுவார்; அலுவல்களுக்கிடையே எங்கே தமது பாராட்டை அவர் படிக்காமல் இருந்துவிடுவாரோ என்ற ஐயத்தினால், சில சமயங்களில் அவருடைய மகளுக்கோ மனைவிக்கோ எழுதி, அவருக்கு அது அஞ்சலாகும்படி செய்வார். பாராட்டுவதிலும் பாராட்டி மகிழ்விப்பதிலும் அப்படி ஓர் அக்கறை !

குற்றாலக் கதைகள் தவிர, வேறு கதைகள் நாவல்களுக்கான கருத்துக்களும், கற்பனைகளும், அந்த மலைப் பிராந்தியக் காட்சிகளினாலும் நினைவுகளினாலும், கல்கியின் மனத்தில் தோன்றி இருக்கத்தான் செய்யும். பொதுவாக, அவருடைய படைப்பு மனத்தின் இயக்கத்துக்கு, அவருடைய குற்றாலவாசமும் அனுபவங்களும் ஓரளவு உதவியாய் இருந்தன என்று சொல்லலாம். அப்படி உதவியாய் இருந்ததற்கு, டி.கே.சி.யின் நட்பும் விருந்தோம்பலும் வகை செய்தன.

''ரசிகமணி'' என்ற பட்டப் பெயரை டி.கே.சி.க்குச் சூட்டியவர் கல்கிதான். பின்னர், ரசிகமணி குற்றாலத்தில் வசிக்கும் தமிழ்ப் பெரியாராய் விளங்கிய போது, அதற்கு மேலாக, ''குற்றால முனிவர்'' என்றே போற்றினர்.

குற்றால முனிவரின் பேரன்புக்கு உரித்தாய் இருந்தவர்களில் ஒருவரான எஸ். மகராஜன், அன்னாரை ஓர் ''ஆனந்த தத்துவம்'' என்று வர்ணித்திருக்கிறார். அந்த ஆனந்த தத்துவம், தன்னை மறந்த லயத்தில் கல்கியை ஆழ்த்திய நேரங்கள் எத்தனையோ ! அந்த நேரங்களில் பொங்கிய இலக்கியப் படைப்பாற்றல் எவ்வளவோ !

(தொடரும்)



**பூச்சிகளைத் தயாரிக்கும் தொழிற்சாலை!**

பூச்சிகளை உற்பத்தி செய்யும் வேலையில் நான்கு ரஷியத் தொழிற்சாலைகள் மும்முரமாக ஈடுபட்டிருக்கின்றன !

ரசாயன பூச்சி மருந்துகளின் உபயோகத்தைக் குறைப்பதற்காக இந்த ஏற்பாடு.

''டிரைகோ கிராம்மா'' எனப்படும் இந்தப் பூச்சி, கண்ணுக்குத் தெரியாத சிறிய பூச்சியாகும். பயிர்களை அழிக்கும் இதர பூச்சிகளின் முட்டைகளில் இந்தப் பூச்சி தன் முட்டைகளை இடுகிறது. இதன் மூலம் அப்பூச்சிகள் அழிக்கப்படுகின்றன. இதனால் பலவகை பயிர்களையும், பழ மரங்களையும் பாதுகாக்க முடியும்.



**சென்ற வாரம்......**

காதலர்கள் ரமேஷும் மாலதியும் ஒருநாள் உல்லாசமாக 'பிக்னிக்' கிளம்பினர். நகரைத் தாண்டி அப்பால் கடற்கரை ஓரப்பகுதியில் சென்று கொண்டிருந்தது ஜீப். திடீரென்று ஒரு பெண் வீரிட்டு அலறும் சத்தம் கேட்கவே வண்டியை நிறுத்திவிட்டு இருவரும் சவுக்குத் தோப்புக்குள் நுழைந்து சென்றார்கள். ஒரு பெண்ணின் 'ப்ரா' தரையில் கிடப்பதைக் கண்டார்கள். அவளை யாரோ பலவந்தப்படுத்தி இழுத்துச் சென்றிருக்கிறார்கள் என்ற எண்ணத்தில் அவர்கள் மேலே நடந்தபோது தூரத்தில் ஒரு பாழடைந்த மண்டபம் தென்பட்டது. 'வா, அங்கே போய்ப் பார்க்கலாம்' என்று ரமேஷ் துரிதப்படுத்த, மாலதியோ ஆபத்தை விலைக்கு வாங்கிக் கொள்வதாக அது முடியும் என அஞ்சினாள். அதே சமயம் கடலோரத்தில் ஒரு விசைப்படகில் யாரோ இருவர் வெள்ளையாக எதையோ ஏற்றிக் கொண்டிருப்பது தெரிந்தது. 'நாம் அவர்களை நெருங்குமுன் விசைப்படகு புறப்பட்டு வெகு தூரம் போய்விடும்; பிரயோஜனமில்லை' என்று தீர்மானித்து ரமேஷும் மாலதியும் திரும்பினார்கள்.

மாலதியின் அண்ணன் சேகர் போலீஸ் அதிகாரி. அவனுக்கு ரமேஷின் தங்கை விமலாவிடம் அன்பு. கல்யாணப் பேச்சும் நடந்திருக்கிறது. நகருக்குத் திரும்பியதும் சேகரிடம் மாலதியை ஒப்படைத்து விட்டு வீட்டுக்குப் புறப்பட்டான் ரமேஷ். 'விமலாவிடம் நாளைக்கு வருகிறேன் என்று சொல்' என்றான் சேகர். 'உன்னால் 'வரமுடியாது; மாலதி உனக்கு ஒரு வழக்கு கொண்டு வந்திருக்கிறாள்!' என்று கூறி விடை பெற்றான் ரமேஷ். வீட்டுக்கு வந்து சேர்ந்தவனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. கதவு திறந்திருந்தது. தங்கை விமலா வழக்கமாக ஆபீஸுக்குக் கொண்டு போகும் பிளாஸ்டிக் கூடை தரையில் கிடந்தது. ஆனால் விமலாவைக் காணோம்!

இனி மேலே........

## 2. ஏரிக்கரையில் ஒரு பிணம்!

ரமேஷின் உடல் இனம் புரியாத பயத்தால் பதறியது.

''விமலா! விமலா!'' என்று இரைந்து கூப்பிட்டான். பதில் இல்லை. பஸ்ஸரை அழுத்திவிட்டுக் காத்திருந்தான். அது அரை நிமிஷ நேரம் ரீங்காரமிட்டுவிட்டு ஓய்ந்தது.

வழக்கம்போல் விமலா, ''வந்துவிட்டாயா, அண்ணா!'' என்று கையைப் புடவைத் தலைப்பில் துடைத்துக் கொண்டு ஓடி வரவில்லை!

'ஏன் வரவில்லை அவள்?' — வயிற்றைக் கலக்கியது ரமேஷுக்கு.

''ஸார்! மீட்டரைப் பார்த்து என்னை அனுப்பிச்சிட்டீங்கன்னா தேவலை... எம்மா நாழி ஸார், நிக்கறது?'' என்று ஆட்டோ டிரைவரின் குரல் கேட்டது.

''இதோ வந்துவிட்டேன், அப்பா!'' என்று படிகளைவிட்டு இறங்கிய ரமேஷ் பர்ஸைத் திறந்தான். அவன் கை தானே நடுங்கியது. சட்டென்று மூளையில் ஒரு யோசனை. 'பட்'டென்று திறந்த பர்ஸை மூடிவிட்டு, ''ப்ளீஸ், வெயிட் டிரைவர்! ஒரு வேளை திரும்பிப் போக வேண்டியிருந்தாலும்

# சுவரில் இரு விழிகள்

ரேகா சந்திரநாத்

இருக்கும்'' என்று சொல்லிவிட்டு உள்ளே ஓடினான்.

சமையல் அறையில் எல்லாம் வைத்தது வைத்த மாதிரியே இருந்தது. இராத்திரி சமையலுக்கு ஏற்பாடு செய்த அறிகுறியையே காணோம். ஓ! இத்தனை நேரத்துக்கு இங்கே கூட்டும் சாம்பாரும் மணமாய் மணக்குமே!

படுக்கையறையில், உடம்புகிடம்பு சரியில்லாமல் கிடக்கிறாளோ, என்று அங்கே ஓடினான் ரமேஷ். காலையில் அவள் களைந்து போட்டு விட்டுப் போன பழைய 'லாரி'தான் கட்டி லில் கிடந்தது. தினமும் டியூட்டியிலிருந்து வந்ததும் அதை உடுத்திக் கொண்டுதான் வீட்டு வேலைகளைச் செய்வாள்!

ஸ்டோர் ரூம், பாத் ரூம், கொல்லைக் கட்டு— ஓரிடம் பாக்கியில்லை. பார்த் தாகிவிட்டது.

ஊஹூம்! விமலா இல்லவே இல்லை!

ரமேஷின் அடி வயிற்றில் தீப்பந்தே இப் பொழுது புரண்டது. 'ஓ! என்னமோ ஆகி விட்டது. அவளுக்கு' — மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்தான். எட்டு பத்து! மைகாட்! இவ்வளவு நேரம் விமலா வீட் டுக்கு வெளியே இருந்ததே, கிடையாதே! யாரை விசாரிப்பது?

விமலாவின் தோழி கலாவின் நினைவு வந்தது. அவசரமாக டெலிபோனில் கலா வின் எண்ணைச் சுழற்றினான். எதிர்த் திசை யில் ரிஸிவரை எடுத்தார்கள்.

''ஹலோ, கலா ஹியர்—''

''ஓ, மிஸ் கலா— ரமேஷ் பேசுகிறேன்.''

''ஓ, ரமேஷ்! என்ன விஷயம்?'' என்று கேட்டாள் கலா.

''ஒன்றுமில்லை. ஒரு விஷயம் தெரிஞ்சுக்கத் தான் கூப்பிட்டேன்.... நீங்களும் விமலாவும் சேர்ந்துதானே தினமும் திரும்பி வருவீர்கள்.. இன்னிக்கும் விமலா உங்ககூடத்தான் வந் தாளா....?''

''ஏன் கேட்கிறீர்கள், ரமேஷ்!... இரண்டு பேரும் ஒன்றாகத்தான் வந்தோம்.... நான் பிளாஸா வாசலில்தான் வழக்கம்போல் காத் திருந்தேன். அவள் அங்கே வந்து என்னோடு சேர்ந்து கொண்டாள்.... இரண்டு பேரும் பஸ் ஏறி வந்தோம்.... ஓர் ரமேஷ்! எனி திங் ராங் வித் ஹர்.....?''

''பஸ் ஏறி எங்கே வந்து இறங்கினீர்கள்?''

''அவள் வழக்கம்போல் ஸிடி மார்க்கெட் டில் இறங்கிக் கொண்டாள்.... நான் ஜர்னி யைக் கண்டின்யூ பண்ணினேன்....''

''வழியில் இரண்டு பேரும் பேசிக் கொண்டீர்களா?''

''எ லாட்—''

''அவள் எப்படி இருந்தாள்?''

''ஆஸ் யூஷுவல்.... எந்த வித்தியாசமும் தெரியவில்லை.... மார்க்கெட்டில் இறங்கும் போது, 'அடடா!' என்றாள். 'என்ன, ஏதா வது மறந்துவிட்டாயா?' என்று கேட்டேன்.' 'ஆமா!... என் ஹாண்ட் பாக். அதை மதுரபவனத்திலே மறந்து வைச்சுட்டு வந்துட் டேன்....' என்று பதறினாள்... 'அவ்வளவு தானே! வால்யுபிளா அதிலே ஒன்றும் வைக்கலையே ... நாளைக்குப் போய் எடுத்துக் கொண்டால் போகிறது' என்றேன். 'இல்லே கலா! அதிலே ரொம்ப முக்கியமான பண்டம் ஒன்று இருக்கிறது.... அது யார் கையிலும் கிடைச்சுடக் கூடாது!' என்றாள்... 'சரி தாண்டி, இத்தனை நாழிகைக்கப்புறம் நீ பஸ் பிடிச்சு, இந்த டிராபிக் ஜாமில் நீந்தி, எக்ஸ்டென்ஷன் போயிட்டு வர்றதுக்குள்ளே, நடு ராத்திரியாகிவிடும். எல்லாம் காலையிலே பார்த்துக்கோ!' என்றேன்—''

'' எத்தனை மணிக்கு மார்க்கெட்டில் இறங் கினாள்?''

'' மார்க்கெட் டவரிலே நான் மணி பார்த்து என் வாட்சைக் 'கரெக்ட்' பண்ணிக் கொண்டேன். எனக்கு நினைவிருக்கிறது. அப்போ மணி சரியாக நாலு முப்பத்தைந்து.. ரமேஷ்! என்ன, என்னிக்கும் இல்லாமல் இன்னிக்கு இப்படியெல்லாம் கிராஸ் பண்ண றீங்க....? விமலா அங்கே வந்து சேரலையா?''

## இந்த மர்ம நாவலை நீங்கள் படித்து வரும்போதே ரூபாய் 500/- பரிசு பெறும் வாய்ப்பையும் அடைகிறீர்கள்!

இந்த நாவலைப் படித்துக்கொண்டு வரும்போதே ரூ. 500/- பரிசு பெறும் வாய்ப்பும் உங்களுக்கு இருக்கிறது.

கதை முடிவதற்கு இன்னும் நாலு அத்தியாயங்களே பாக்கி இருக்கும்போது அடுத்த பத்து நாட்களுக்குள் கதையின் முடிவை ஊகித்துச் சொல்லுமாறு நேயர்களைக் கேட்போம். ரேகா சந்திரநாத் எம்மிடம் எழுதித் தந்திருக்கும் முடிவினை ஊகித்து எழுதுகிறவருக்கு ரூ. 500/- பரிசு வழங்கப்படும். ரேகா சந்திரநாத் போலவே அதே நடையைக் கையாண்டு எழுதத் தேவையில்லை. கதையின் முடிவு இன்னது என்று ஊகித்துச் சுருக்கமாகக் கூறினால் போதும்.

ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதியிருந்தால் பரிசுத் தொகை பிரிந்து அளிக்கப்படும். யார் கண்டது? முழுப் பரிசையும் நீங்களே கூடத் தட்டிக்கொண்டு போகலாம்.

**முக்கிய நிபந்தனை:** இப்போட்டியில் பங்கு கொள்கிறவர்கள் ரேகா சந்திரநாத்தின் நண்பர்களாகவோ, உறவினர்களாகவோ, கல்வி காரியாலயத்தைச் சேர்ந்தவர்களாகவோ, அவர்களின் உறவினர்களாகவோ எழுத்தாற்றலால் ஏற்கனவே பிரபலம் அடைந்தவர்களாகவோ இருக்கக் கூடாது.

''ஆமாம், கலா!... அவள் வரவில்லை. ஆனால் அவளுடைய கூடை மட்டும் வந்து வாசற் கதவடியிலே உட்கார்ந்து கொண்டிருக்கிறது... வித் பிரஷ் வெஜிடபிள்ஸ்—''

''என்ன சொல்றீங்க, ரமேஷ்... விமலா வரலையா?'' என்று கலா பதறிக்கொண்டே கேட்டாள்.

''மார்க்கெட்டிலிருந்து கறிகாய் வாங்கிக் கொண்டு வீடு வரை நிச்சயமாக வந்திருக்கிறாள். ஆனால் உள்ளே வரவில்லை... வாசலில் நின்றவாறே கதவைத் திறந்து, கூடையை எட்டி வைத்துவிட்டு —''

''எங்கே போனாள்?''

''அதுதானே தெரியவில்லை!''

''ஒருவேளை மதுர பவனத்துக்கே திரும்பப் போயிருப்பாளோ?... ஏதோ ஹாண்ட்பாக் பற்றிக் கவலைப்பட்டாளே, பெரிதாக. அதை எடுத்து வரப் போயிருந்தால்?.... போன் செய்து கேட்டீர்களா? அங்கே வந்தாளா, என்று?''

''அப்படிப் போயிருந்தால் கதவைப் பூட்டிக் கொண்டல்லவா போயிருப்பாள்? சாவி பூட்டிலேயே தொங்குகிறதே, மிஸ் கலா!'' என்றான் ரமேஷ்.

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் கலா.

''நானா? எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது.... என்னென்னவோ பயங்கரமாகவெல்லாம் தோன்றுகிறது.... கதவைத் திறந்திருக்கிறாள்; உள்ளேயும் வரவில்லை. திரும்பப் பூட்டிக் கொண்டும் போகவில்லை.... என்ன நினைப்பது? இந்த மாதிரி சந்தர்ப்பத்தில்.... கதவைத் திறந்து கொண்டிருந்தபோது பின்னாலிருந்து பாய்ந்து பிடித்து அமுக்கிக் கொண்டு டாக்ஸியிலோ காரிலோ தூக்கிப் போட்டுக் கொண்டு...''

''ரமேஷ்'' என்று போனிலேயே கத்திவிட்டாள் கலா. ''ஏன் வேண்டாததையெல்லாம் நினைக்கிறீங்க...? அப்படி எல்லாம் அவளுக்கு ஒண்ணும் ஆகியிருக்காது. ஹாண்ட் பாக்கை எடுத்து வரத்தான் போயிருப்பாள்....அவசரத்திலும் கவலையிலும் கதவைப் பூட்ட மறந்திருக்கலாம். எதுக்கும் மதுரபவனத்தைக் கூப்பிட்டுக் கேளுங்களேன்.....'' என்றாள் கலா.

''போனில் கூப்பிட்டுப் பிரயோசனமில்லை. யாருமே சரியாகப் பதில் சொல்லமாட்டாங்க.... தாரிணி தேவி அம்மா ஒரு நித்ய நோயாளி .... அவங்க பெட் ரூமிலே போனும் கிடையாது.... அவங்க ஹஸ்பெண்ட் கோவிந்துக்குப் 'போன்'னாலே அலர்ஜியாம்...நான் நேரேயே போகிறேன்.....''

''அப்படியே பண்ணுங்க... பார்த்துட்டுப் பத்திரமா இருக்கான்னு எனக்கும் மெஸேஜ் கொடுக்கணும்..... நான் கவலைப்பட்டுக் கிட்டே இருப்பேன் —'' என்றாள் கலா.

''ஓ! ஷ்யூர்.''

போனை வைத்துவிட்டுக் கதவை அவசரமாகப் பூட்டிக் கொண்டு, ரமேஷ் வெளியே வந்தபோது அவன் உடலெல்லாம் சகோதர பாசத்தால் பதறிக் கொண்டிருந்தது.

''ஸாரி — டிரைவர். கொஞ்சம் லேட்டாகி விட்டது.... எக்ஸ்டன்ஷனுக்குப் போ'' என்று ஆட்டோவில் ஏறி உட்கார்ந்தான்.

மதுர பவனம் அரை இருளில் மூழ்கிக் கிடந்தது. இருண்ட — விஸ்தாரமான தோட்டத்திலிருந்து பன்னீர்ப் பூக்களின் மணம் 'கம்' என்று வந்தது.

கீழே வாசற்படியில் ஒரே ஒரு விளக்கு மட்டும் எரிந்தது. மாடியில் சில ஜன்னல்கள் திறந்திருந்தன. குழாய் விளக்குகளின் பால் ஒளி ஒரு ஜன்னலிலிருந்து சிதறியது. ஒரு ஜன்னலில் மின் விசிறி சுழல்வது தெரிந்தது. அதுதான் தாரிணி தேவியின் அறை.

பஸ்ஸரை அமுக்கினதும் ஒரு வேலைக்காரி வந்து கதவைத் திறந்தாள். ''மிஸ்டர் கோவிந்த் இருக்கிறாரா?'' என்று கேட்டான் ரமேஷ்.

''ஐயாவையா கேக்கறீங்க?..... அவர் ஊரிலேயே இல்லையே. காலையிலேதான் வருவாரு'' என்றாள் வேலைக்காரி.

''சரி, மிஸ் விமலா அம்மா வந்தாங்களா?''

''நான் பார்க்கலிங்க. நான் இப்பத்தான் டியூட்டிக்கே வந்தேனுங்க...''

''சரி, வழியை விடு. நான் யஜமானியம்மாளையே கேட்கிறேன்'' என்று உள்ளே போனான் ரமேஷ்.

மாடியறையில் இரண்டு பெரிய ராட்சதத் தலையணைகளை ஒன்றின் மீது ஒன்றாக வைத்துக் கொண்டு அதன் மீது சாய்ந்து படுத்திருந்தாள், தாரிணி தேவி. நீலப் பட்டும், கத்தரிப் பூ ஜாக்கெட்டும் அவள் உடம்பில் பளபளத்தன. வலக்கை கட்டிலோரம் தொங்கிற்று.

ரமேஷ் உள்ளே நுழைந்தபோது முதன் முதல் அவன் கண்களில் பட்டது அந்தக்

கைதான். அந்தக் கையில், மோதிர விரலில், ஒரு சின்ன நாவல் பழத்தின் அளவில் ஒரு நீலக் கல் மோதிரம் மின்னிற்று.

''ஓ, இதுதான் அந்த விஷ மோதிரமா?'' என்று நினைத்துக் கொண்டான் ரமேஷ்.

விமலா சொன்னது அவன் நினைவுக்கு வந்தது. ''போதுமே ...... அந்த அம்மாவும் அவங்க தற்பெருமையும். இவங்க தாத்தாவுக்குத் தாத்தா வடக்கே யாரோ ராஜ குடும்பத்திலே சம்பந்தம் வச்சிருந்தாராம். உயிரைத் திருணமாக மதிக்க, கற்போடு விளங்கிய ராணிகள் வாழ்ந்த குடும்பமாம் இது. அவர்கள் ரத்தம் இந்த அம்மா உடம்பிலேயும் ஓடுதாம். இவளும் ஒரு ராஜகுமாரியாம். அந்த மோதிரம் தலைமுறை தலைமுறையாக ராஜகுமாரிங்க போட்டுக்கொள்கிற மோதிரமாம். அதிலே எப்பவும் விஷம் வைச்சிருப்பாங்களாம். நினைச்சாத் திறந்து வாயிலே போட்டுக் கொண்டு உயிரை விட்டுடுவாங்களாம். அய்ய...அய்ய... எனக்குச் சகிக்கலே இந்த டம்பம்'' என்றாள் விமலா -- அந்த விஷ மோதிரம் இதுதானா?

''யார்?'' என்று இமைகளை அரைவாசி விலக்கிக் கொண்டு புருவத்தை உயர்த்திக் கேட்டாள் தாரிணி தேவி.

''நான்தான் ரமேஷ்...விமலாவின் பிரதர். குட் ஈவினிங் மேடம்!''

பதில் வணக்கம்கூடச் சொல்லாமல் தலையை மட்டும் இலேசாக அசைத்தாள் தாரிணி தேவி. ''உஸ்... அப்பப்பா... மண்டையைப் பிளக்கிறதே... யாரங்கே... அந்த நர்ஸ் விமலாவைக் கூப்பிடு'' என்று ரமேஷை அந்த விநாடியே மறந்து விட்டது போலக் கத்தினாள்.

''அவங்க டியூட்டி முடிஞ்சு நாலு மணிக்கே போயிட்டாங்க அம்மா!'' என்றாள் பணிப்பெண்.

''போய் விட்டாளா?... சுத்த தரித்திரம்... யாரைக் கேட்டுப் போனாள்? இந்தக் காலத்து வேலைக்காரிகள் தம்படிக்குப் பிரயோசனமில்லே. அந்தக் காலத்துலே எங்க ரேகா சமஸ்தானத்திலே இந்த மாதிரி ஒருத்தி சொல்லாமல் கொள்ளாமல் அந்தப் புரத்தை விட்டுப் போயிருந்தால் என்ன செஞ்சிருப்பாங்க தெரியுமா? கழுத்தளவு புதைச்சு வைச்சு யானைக் காலாலே இடறச் செய்திருப்பாங்க!...''

அக்கடாவென்று மல்லாந்து படுத்துக் கொண்டு கண்களைத் திறக்காமலே பேசினாள் தாரிணி தேவி. ரமேஷ் அவளை வெறுப்புடன் பார்த்தான்.

''சரி, மேடம் – நான் வருகிறேன்'' என்று கிளம்பினான்.

''போகிறாயா? சரி. இதைக் கேட்டுவிட்டுப் போ. கொஞ்சம் உன் தங்கையைக் கண்டித்து வை... உயிர் பெரிசில்லே; மானம்தான் பெண்களுக்குப் பெரிசு. மானஹானி ஏற்படும் என்று தெரிந்தால் 'சடக்'கென்று அந்த விநாடியே விஷத்தை விழுங்கிவிட வேண்டும். எதற்குச் சொல்கிறேன், தெரியுமா?... யாரோ மோட்டார் சைக்கிளில் வந்து தெருக் கோடி பார்க்கில் நிற்கிறானாம். இவள் போய்ப் பின்னால் ஏறிக் கொள்கிறாளாம். என்ன நம்பர் வண்டி ராஜம்மா?...''

''0444 – அம்மா!''

ரமேஷ் சிரித்துக் கொண்டான். அது சேகரின் நம்பர். ''தாங்க்ஸ் மேடம்'' என்று கீழே இறங்கி வந்தான். ஹாலைக் கடக்கும் போது ஓரமாக இருந்த டெலிஃபோன் அடித்தது.

ஒரு நிமிஷம் யாராவது வந்து எடுப்பார்களோ என்று தயங்கினான். யாரும் வராமற் போகவே அவனே போய் எடுத்தான்.

''ஹலோ – மதுரபவனமா?... ரமேஷ் வந்திருக்கிறாரா, அங்கே... ஐ வாண்ட் மிஸ்டர் ரமேஷ்... விமலாவின் பிரதர்... ஓ, ரமேஷ்... நீங்கள்தானா? மை குட்னஸ்... எங்கெங்கே தேடுகிறேன், ரமேஷ் உங்களை:... முக்கியமான செய்தி ரமேஷ்... ஏரிக் கரையில் ஒரு பெண் கொல்லப்பட்டுக் கிடக்கிறாளாம். நம்ப விமலா மாதிரியே இருக்கிறதாம்–'' என்றது கலாவின் குரல்.

''என்ன? விமலா மாதிரியா?'' என்று கேட்டபோது ரமேஷின் உடல் முழுக்கப் பதறியது.

''ஆமாம்..... இப்பத்தான் சேகர் ஃபோனிலே சொன்னார். நான் இப்போ அங்கேதான் கிளம்பிக் கொண்டிருக்கிறேன். கடவுளே, அவளாக இருக்க வேண்டாம் என்று வேண்டிக் கொண்டே போகிறேன்.... ரமேஷ்! கம் இம்மிடியட்லி, தோ்...''

'டக்' என்று ரிஸீவரைக் கலா வைக்கும் சத்தம் கேட்டது.

ரமேஷின் தலை 'கிர்ர்ர்' என்று சுழன்றது; காலடியில் பூமி நழுவுவது போலிருந்தது. கால்கள் தொய்ந்தன. விழுந்து விடாமலிருக்கச் சட்டென்று பக்கத்துச் சுவரைப் பிடித்துக் கொண்டான் ரமேஷ். (தொடரும்)



## ஹாலிவுட் நிபந்தனை!

ஹாலிவுட் நடிகைகள் சினிமா ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போடும்போது ஒரு நிபந்தனைக்கு உட்பட வேண்டும். ''படம் முடியும் வரை என்னுடைய எடை ... கிலோவுக்குமேல் அதிகமாக விடமாட்டேன்'' என்பதுதான் அது!

ஸ்க்ரீன் — சரோஜா ராமச்சந்திரன்

*திறமைமிக்க திலகங்கள்.*



# பேகம் உஸ்மான் அலிகான்

ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த குடும்பம். வசதி மிக்க பெருந்தனக்காரர்கள். கணவர் ஹாஜி உஸ்மான் அலிகான், பெரிய அளவில் வியாபாரத் துறையில் ஈடுபட்டிருப்பவர். இடையே பாராளுமன்ற உறுப்பினர் பதவியையும் வகித்தார். சுமார் இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு முன் கான் தம்பதியர் சென்னைக்குக் குடியேறினர்.

குழந்தைகளைக் கவனித்த நேரத்தைத் தவிர, மீதி நேரத்தைச் சமூகப் பணியில் செலவழிக்கலாம் என்று பேகம் உஸ்மான் அலிகானுக்குத் தோன்றியது. நாளடைவில் அது முஸ்லீம் சமூகப் பணி என்று இல்லாமல், அனைத்துச் சமூகங்களையும் தழுவிய நற்பணியாக மலர்ந்தது.

எடுத்துக் கொண்ட காரியத்தை நன்கு திட்டமிட்டு, ஆராய்ந்து, முன் யோசனையுடன் நடத்து கொண்டு உற்சாகம் குறையாமல் பார்த்துக்கொள்வதில் தான் இவருடைய வெற்றியின் ரகசியம் அடங்கி யிருக்கிறது. 'கமிட்டி மீட்டிங்கு' களுக்கு ஒருநாளும் கால தாமதமாக வரமாட்டார். மற்ற அங்கத்தினர்களுடன் பொறுமையுடன் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு உற்சாகப் படுத்திக் காரியங்களைச் சாதிப்பார்.

ஆனாலும் சில சமயங்களில் அவர் சோதனைகளுக்கு ஆளாகாமல் இல்லை. ஒரு ஸ்தாபனத்தின் உதவி நிதி வசூலுக்காகக் கல்லூரி அரங்கம் ஒன்றில் பெரிய கலை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்துவிட்டார். மின்சார அலங்காரங்களையும், இணைப்புக்களையும் செய்ய ஒப்புக் கொண்டிருந்த நபர் கடைசி நிமிஷம் வரை வரவேயில்லை. உடனடியாக வேறு ஒரு நபரைக் கொண்டு வந்து மின்சார அலங்காரங்களைச் செய்ய வைத்தார்.. நிகழ்ச்சி வெற்றிகரமாக நடந்தேறியது. ஆனால் அன்று ஏற்பட்ட மனக் கசப்பு வேதனை — அது பேகம் அவர்களுக்குத்தான் தெரியும்! இந் நிகழ்ச்சியில் பேகம் உஸ்மான் அலிகானின் திறமையை உறுதிப் படுத்தும் விஷயம் ஒன்றுண்டு. அன்று காலையில் ஒப்புக் கொண்டு, வராமல் போன மின்சாரக்காரரும் தம் பணியை இந்த உதவி நிதி நிகழ்ச்சிக்கு இலவசமாக அளிக்க ஒப்புக் கொண்டிருந்தார். பிற்பகலில் தேடிக் கண்டு பிடிக்கப்பட்ட மாற்று மின்சாரக்காரரும் தம் பணியை இந்த நிகழ்ச்சிக்கு இலவசமாகவே அளித்தார்! உதவி நிதி சேர்க்கும்போது, அதற்கான ஏற்பாட்டுச் செலவுகளில் வசூலில் பெரும் பகுதி செலவாவதை இவர் விரும்புவதில்லை. ஆகவே முடிந்தவரை ஏற்பாட்டுச் செலவுகளிலும் இவர், பலருடைய தாராள சிந்தனையைப் பயன்படுத்திக் கொண்டு விடுவார். இல்லாதபோனால் இவரால் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் லட்சக் கணக்கில் நிதி திரட்ட முடியுமா என்ன?

1963ம் ஆண்டில் முதல் தடவையாகச் சென்னையில் சினிமா நட்சத்திரங்களின் கிரிக்கெட் ஆட்டப் போட்டிக்கு ஏற்பாடு செய்த பெருமை இவரையே சேரும். பம்பாய் நட்சத்திர அணியும் தமிழ் நாடு நட்சத்திர அணியும் மோதின. விளைவு : சென்னை ராயப்பேட்டை பகுதியில் 'ரெட். கிரஸன்ட்' ஆஸ்பத்திரி விரிவாக வளர்ந்தது.

'சமூக உதவி நிறுவனம்' (Social Aid Society) என்ற ஒரு ஸ்தாபனத்தை இவரே தொடங்கி, அதற்கு நடைமுறை போஷகராகவும் செயலாளராகவும் பணி செய்கிறார்.

எந்தத் தரும காரியத்துக்குப் பண வசூல் செய்தாலும் நிதிக் கணக்கை அதற்கான விழாவுக்கு முன்பே ஆடிட்டர்களைக் கொண்டு சரி பார்த்து, காசோலையுடன் தயாராக வைத்திருப்பார்.

ஒரு சந்தர்ப்பத்தில் நிதி வசூல் குழு உறுப்பினர் ஒருவர், ஒரு குறிப்பிட்ட தொகைக்கு டிக்கட்டுகளை விற்றிருப்பதாகச் சொன்னார். பேகம் உஸ்மான் அலிகானும் அதை நம்பி அந்தத் தொகையை வரவுக் கணக்கில் குறித்துக் கொண்டார். ஆனால் கடைசி வரை அந்த உறுப்பினரிடமிருந்து, தொகையோ, விற்ற டிக்கட்டுகளுக்கான அடிக் கட்டையோ வந்து சேரவில்லை. ஆடிட்டர்களுக்குப் பதில் சொல்லி ஆக வேண்டுமே? அந்தத் தொகையைத் தம் கையிலிருந்தே போட்டு ஈடு கட்டி விழாவன்று மொத்த தொகைக்கான செக்கையும் கொடுத்து விட்டார்.

ஒரு நிதி வசூலுக்கான கலை விழா நடத்த ஏற்றுக் கொண்டு விட்டாரானால், அது முடியும்வரை இவருக்கு



*சொல்பவர்: ஹபிபுல்லா பாஷா*

அதைப் பற்றிய சிந்தனையாகத்தான் இருக்கும். விழாவில் பங்கு கொள்ள ஒப்புக் கொண்டிருக்கும் கலைஞர்கள் காலை வாரிவிடாமல் இருக்க வேண்டும். விழாவுக்குத் தலைமை வகிக்க ஒப்புக் கொண்டிருக்கும் பிரமுகர் நேரத்தோடு வந்தாக வேண்டும். இவற்றையெல்லாம்விட, மேடையில் தோன்றும் கலைஞர்களுக்கு உற்சாகம் அளிக்கும் வகையில் அரங்கத்தில் ரசிகர்கள் நிரம்பி யிருக்க வேண்டும். சில சமயங்களில் நன்கொடையாகப் பணம் கொடுத்த பலர், 'நாம்தான் பணம் கொடுத்தாயிற்றே' என்ற நினைப்பில் நிகழ்ச்சிகளுக்கு வராமலேயே இருந்து விடுவார்கள்.' அந்த நேரங்களில் கார்களை அனுப்பியேனும் அரங்கத்தை நிரப்ப ஆட்களைக் கொண்டு வரும் பொறுப்பும் இவர் மேல் விழுவது உண்டு. அதற்கும் இவர் மனம் சலிப்பதில்லை.

திரு பக்தவத்ஸலம் அவர்கள் முதல்வராகஇருந்த போது, சிறு சேமிப்பு இயக்கத்துக்கான விழாக்களை நடத்தி சுமார் இரண்டரைக் கோடி ரூபாய்வரை வசூல் செய்திருக்கிறார். கிறிஸ்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளிக்காக மூன்று தடவைகளில் சுமார் மூன்றரை லட்சத்துக்கு மேல் வசூலித்திருக்கிறார். யுத்த காலத்தில் ஜவான்கள் நலத்துக்காக இரண்டு லட்சம். இப்படி எத்தனையோ முயற்சிகள்; வெற்றிகள்.

இதற்காக இவர் தம் குடும்பப் பொறுப்புக்களைக் கொஞ்சம்கூட மறப்பதில்லை; ஒத்திப் போடுவதில்லை.

இவருடைய இரண்டு மருமகன்களும் இப்போது பேரக் குழந்தைகளைப் பெற்றெடுத்து இவரை மகிழ்விக்கக் காத்திருக்கிறார்கள்.

கேட்டு எழுதியவர்:
**கோமதி சுவாமிநாதன்**

# செயற்கை மழை, இயற்கை நகை!








"ஏழை ஜனங்கள் நம்மைச் செயற்கை மழை இயற்கை மழைன்னு மாறி மாறிச் சொல்வதைக் கேட்டு நான் என்ன இயற்கையா இல்லே செயற்கையான்கற சந்தேகம் எனக்கே வந்துட்டுது."

"டேய்! காலையில் பெய்தது இயற்கை மழையா, செயற்கை மழையா?"

"அதென்னமோ நான் இயற்கையா லீவு விடுவான்னு பார்த்தேன்; விடலில்லே! செயற்கையா லீவு எடுத்துண்டு வந்துட்டேன்!"





"என் அதிர்ஷ்டம்தான் செயற்கை மழை பெய்யறது. செயற்கைப் புஷ்பங்களுக்கும் தண்ணீர் விடணும்னு ரொம்ப நாளா ஆசை!"

"செயற்கை மழையில் ஆனந்தமா நனைஞ்சேன்!"

"அது சரி இப்ப வெயில் அடிக்கிறதே அது இயற்கையா? செயற்கையா?"



# தீவுகள்

இந்திரா பார்த்தசாரதி

## 18

**த**ன் அம்மாவைத் தேடிப் பார்க்க வேண்டிய விலாசங்கள் ஏராளம்; எழுதிப் பார்த்தால் மூன்று பக்கங்களுக்குத் தேறும் என்று அஞ்சலி கூறியதும் ரவோஜாவுக்கு எரிச்சலாய் இருந்தது. அவர் உடனே தம் மகன் ஷம்மியைத் திரும்பிப் பார்த்தார். அவர் அப்படிப் பார்த்தது அவனுக்குச் சங்கடமாக இருந்தது. என்ன பைத்தியக்காரப் பெண், எதற்காக இப்படியெல்லாம் பேசுகிறாள்?

''இதோ பார், நான் உனக்கு ஒரு வாக்குறுதியும் தரமாட்டேன்... என்னால் முடிந்தால் பார்க்கிறேன்...'' என்றார் ரவோஜா.

''அதுதான் நானும் சொன்னேன். உன் அம்மாவுக்கு இதைப் பற்றி ஆட்சேபணை இருந்தால் அப்பா விசாரிக்கத் தயங்குவார் என்று சொன்னேன்'' என்றான் ஷம்மி.

''அம்மாவை விடு. அப்பாவுக்கே இருந்தால்? ஐ டோண்ட் நோ...'' என்று தோள்களைக் குலுக்கிக்கொண்டார் ரவோஜா.

''நீங்கள் காதும் காதும் வைத்தாற்போல் விசாரித்து என்னிடம் மட்டும் சொல்ல முடியாதா?'' என்று கேட்டாள் அஞ்சலி.

''உன் வீட்டில் உள்ளவர்கள் இதைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்?'' என்று வினவினார் ரவோஜா.

''என் அண்ணன் அஷோக், அம்மா திரும்பியே வரமாட்டாள் என்பது போல்தான் பேசுகிறான். அம்மாவுக்குப் பிறகு குடும்ப கௌரவத்தைப் பேணிக் காக்கும் பொறுப்பு தன்னைச் சார்ந்தது போல், நடந்துகொள்கிறான். அம்மாவிடம் சண்டை போட்டுக்கொண்டு போன இன்னோர் அண்ணன் ராகேஷ் திரும்பி வந்துவிட்டான். 'அம்மா போனது வீட்டுக்கு விடுதலை... இதைக் கொண்டாட வேண்டும்' என்று என் அக்கா ஸ்வர்ணு, காலையிலிருந்து குடித்துக்கொண்டேயிருக்கிறாள். இன்னோர் அண்ணன் சதீஷ் எங்கே இருக்கிறான் என்றே தெரியாது.... அப்பா நேற்றுக் காலை ஆபிஸுக்குப் போனவர், இன்று காலைதான் வந்தார்'' என்றாள் அஞ்சலி.

அப்பொழுது டெலிபோன் ஒலித்தது. ரவோஜா எழுந்து சென்றார்.

''ஐ ஸீ... இதோ வருகிறேன்... எங்கே? ஐ ஸீ ... கிவ் மீ டிரைவிங் டைம்... ஓ.கே.''

அவர் அஞ்சலியிடம் திரும்பி வந்தார்.

''என்னுடன் வருகிறாயா?'' என்று அவர் கேட்டார்.

''எங்கே?''

''வாயேன்.... போலீஸ் எப்படி வேலை செய்கிறது என்று உனக்குத் தெரிய வேண்டாமா?'' என்றார் ரவோஜா.

''ஐ ஆம் கேம்'' என்றாள் அஞ்சலி.

*　*　*

**வி**ஜயா அந்த ஓட்டலிலிருந்து வெளியே வந்ததும், அப்படியே வீட்டுக்குப் போய் அம்மாவையும், தங்கைகளையும் அழைத்துக்கொண்டு தில்லியை விட்டே ஓடிப் போய் விடலாமா என்று நினைத்தாள். இந்தச் சிக்கலில் நான் ஏன் மாட்டிக் கொள்ள வேண்டும்? ஷம்மீன் சொன்னது உண்மையாக இருக்குமா! கபூருக்கு ஏற்பட்டிருக்கும் மனக் குழப்பத்தைப் பார்த்தால் இது உண்மையாகத்தான் இருக்குமென்று தோன்றுகிறது. எத்தனை நாட்கள்தான் உண்மை வெளி வராமல் இவரால் கட்டிக் காக்க முடியும்?

என்னை நம்பியிருக்கும், கபூரை விட்டு ஓடி விடுவதா நேர்மை? ஆனால் அவர் சமரஸம் செய்து கொண்டிருக்கும் இச்சூழ்நிலையினின்றும் அவரைக் காப்பாற்ற வேண்டும்., அவருடன் இதைப் பற்றி விவாதிக்க வேண்டும்!

அவள் அலுவலகத்துக்குச் சென்றபோது, கபூர் இன்னும் திரும்பி வரவில்லையென்று தெரிந்தது. மணி அவளை ஒரு விநாடி ஏறிட்டுப் பார்த்துவிட்டு, உடனே ஒரு ஃபைலில் மும்முரமாக ஆழ்ந்தான்.

''மிஸ்டர் கபூரிடமிருந்து ஃபோன் வந்ததா? எப்பொழுது வருகிறார் தெரியுமா?''

மணி 'தெரியாது' என்ற பாவனையில் தோள்களைக் குலுக்கினான். ''எனக்கும் அவர் எப்பொழுது வருவாரென்று தெரிய வேண்டும், தயவுசெய்து சொல்லுகிறீர்களா?''

அந்த அறையிலிருந்த மற்றவர்களும் புரிந்துகொள்ள வேண்டுமென்றே அவள் அவனை ஆங்கிலத்தில் இவ்வாறு கேட்டாள். அவள் எதிர்பார்த்த படியே அந்த அறையிலிருந்த மற்றவர்கள் அவளை நோக்கினார்கள்.

இதற்குள் அவன் மற்றவர்களுக்கு என்னைப் பற்றிய எல்லா விவரங்களையும் சொல்லியிருப்பான்! இப்பொழுது அதை உறுதிப் படுத்துவதுபோல் இவ்வாறு கேட்கிறான்!

அவள் பதில் சொல்லவில்லை; எழுந்து கபூர் அறையை நோக்கிச் சென்றாள்.

வாசலில் உட்கார்ந்திருந்த சப்ராஸி சொன்னான்: ''சா(ஹ)ப் இன்னும் வரவில்லை.''

அவள் அறைக்குள் சென்று சோபாவில் உட்கார்ந்திருந்தாள். மணியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் காட்டிலும், இதுமேல்.

கபூர் வந்தாரானால் அவரிடம் என்ன சொல்வது? ஷம்மீன், கூறியவற்றையெல்லாம் எடுத்துச் சொல்லி இவை உண்மைதானா என்று கேட்பதா? இப்படிப் பேசுவது குரூரமாக இருக்கலாம். ஆனால் வேறு வழியில்லை.

''திரும்பி வந்து விட்டாயா?''

விஜயா திரும்பிப் பார்த்தாள். கபூர் அவளைக் கேள்வி கேட்டுக் கொண்டே, தம் நாற்காலியில் போய் உட்காராமல், சோபாவில் உட்கார்ந்தார். அவர் மிகவும் களைப்படைந்தவர் போல் காணப்பட்டார். திடீரென்று பத்து வயது கூடி விட்டாற் போலிருந்தது. கோட்டைக் கழற்றி அவள் கையில் கொடுத்து 'ஸ்டாண்டி'ல் மாட்டச் சொன்னார்.

''உடனே வந்து விட்டாயா?'' என்றார் கபூர்.

''இல்லை.''

''அவன் ஏதாவது சொன்னானா?''

''நிறைய!''

'ஷூ லேஸை'த் தளர்த்திக் கொண்டிருந்தவர், குனிந்தபடியே பக்கவாட்டமாக அவளைப் பார்த்தார். ஓரிரு விநாடிகள் மௌனம்.

'''நிறைய என்றால் என்ன அர்த்தம்?''

''நிறைய.''

''என்ன சொல்லுகிறாய் நீ?''

''அவனும் நிறையச் சொன்னான். அவற்றில் அர்த்தமும் நிறைய இருக்கின்றன. இதைப் பற்றி விவாதித்தால்தான் அவன் சொல்வது உண்மையா பொய்யா என்று தெரியும்.''

''நான் விவாதிக்க விரும்பவில்லை.''

''ஏன்?''

''அவன் சொல்வது உண்மையாக இருக்கக் கூடாது என்றுதான் நான் விரும்புகிறேன். உண்மையா பொய்யா என்று தெரியாத சந்தேக நிலையில்தான் என்றால் அது உண்மையாக இருக்க முடியாது என்று அதிகமாக நம்ப முடிகிறது. தீவிரமாக ஆராய்ந்து அவன் சொல்வது உண்மை என்று ஏற்பட்டு விட்டால், நான் நானாக இருப்பதற்குக் காரணமான பண்பாட்டுப் பிரக்ஞை என்னைச் சும்மா விடாது. மோகினியிடம் அநுபவித்த நரகம் போதும். புதியதொரு நரகத்தை எனக்கே நான் சிருஷ்டித்துக் கொள்ள வேண்டுமா?''

''இப்பொழுது நீங்கள் அநுபவித்துக் கொண்டிருக்கும் மன நிலை சொர்க்கம் என்கிறீர்களா?'' என்று கேட்டாள் விஜயா. அவள் அவர் அருகில் சோபாவில் உட்கார்ந்தாள்.

''கதவைத் தாளிடு'' என்றார் கபூர்.

அவள் எழுந்துபோய்க் கதவைத் தாளிட்டு விட்டு மீண்டும் அவரருகில் உட்கார்ந்தாள்.

''ஷம்மீன் உன்னிடம் என்ன சொன்னான்?''

''மிஸஸ் கபூரை நீங்கள் கொலை செய்து விட்டதாக...''

''இதை ஏன் இவ்வளவு குரூரமாகச் சொல்கிறாய்?''

''அப்படிக் கொலை நடந்திருந்தால், அதைப்பற்றி எப்படி நாகரிகமாகச் சொல்ல முடியும்!''



''எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் கொலை செய்திருப்பேன் என்று நம்புகிறாயா?''

''முதலில் நீங்கள் நம்புகிறீர்களா? அது தான் முக்கியம்.''

''நேற்றிரவு நடந்தனவெல்லாம் ஒரு கெட்ட சொப்பனம் மாதிரி இருக்கிறது. நான் ஒரு நண்பருடன் வேலை முடிந்த பிறகு சாயந்திரம் அலுவலகத்துக்குத் திரும்பிச் சென்றேன். மணி ஆபீஸ் அறையில் மோகினி காத்துக் கொண்டிருப்பதாகச் சொன்னான். நான் காரை விட்டு இறங்காமல் அப்படியே திரும்பி விட்டேன். வீட்டுக்குப் போகவும் மனசில்லை. ஹோட்டலுக்குச் சென்றேன். எத்தனை குடித்தேன் என்று எனக்கே தெரியாது. வாழ்க்கையில், நான் நேற்றிரவு குடித்தது போல் குடித்ததே கிடையாது. அப்பொழுதுதான்... மோகினி அங்கு வந்தாள்.''

அவர் மேலே ஒன்றும் சொல்லாமல் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். அவர் மேஜையின் கால்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரை அப்பொழுது பார்க்கும்போது வேறு மனிதரைப்போல் காணப்பட்டார். நேற்றிரவு நடந்த சம்பவங்கள் நினைவுக்கு வந்து அவர் முக பாவத்தை மாற்றி யிருக்க வேண்டும். முகத்தில் வெறுப்பு தெரிந்தது; பீதி தெரிந்தது. கலவரம், குழப்பம்... இன்னும் பலவகையான உணர்ச்சிகள்.

அவர் வலக்கை முஷ்டியால் ஓங்கி இடது உள்ளங் கையில் குத்திக் கொண்டே, குரலைச் சற்று உயர்த்திப் பல்லைக் கடித்தவாறு கூறினார்: ''நான் ஒரு முட்டாள்... நான் ஒரு முட்டாள்!''

விஜயாவுக்கு அவரைப் பார்த்தால் பரிதாபமாக இருந்தது. மோகினியைக் கொலை செய்துவிட்டதாக அவரே நம்புகிறாரா? குடி போதையிலிருந்த இவரை இப்படி நம்பும்படி அவர்கள் ஏன் செய்திருக்கக் கூடாது? அப்படிக் கொலை நடந்திருந்தால், இது எப்படி ஒருவருக்கும் தெரியாமல் நடந்திருக்க முடியும்? ஒரு பிரபல ஐந்து நட்சத்திர ஹோட்டலிலிருந்தும் 'பாடி'யை அப்புறப்படுத்துவது என்பது சுலபமான காரியமா? அப்படி ஏதாவது, நடந்திருந்தால் இந்தப் பயங்கர உண்மை வெளியே வராமல் எத்தனை பேருக்கு எத்தனை சாட்களுக்கு வாய்க்கரிசி போட முடியும்? மோகினியை மறைத்து வைத்து விட்டு, ரத்தன்லாலும் ஷம்மீயும் ஏதோ நாடக மாடுகிறார்கள்! இதைத் தீவிரமாக ஆராய விரும்பாத கபூரும் தம்முடைய பணத்தினால் இதைச் சமாளிக்க முடியுமென்று நினைக்கிறார்!



"மிஸஸ் கபூர் அந்த ஹோட்டல் அறைக்கு எப்படி வந்தார்? நீங்கள் அந்த அறையில் இருக்கின்றீர்கள் என்று அவருக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டாள் விஜயா.

"ரத்தன்லால் சொல்லி யிருப்பானென்று நினைக்கிறேன். கறவை மாட்டை எப்படிக் கறப்பது என்று அவனுக்குத் தெரியும். அவன் விரித்த வலையில் நான் விழுந்தது தான் என் முட்டாள்தனம். ஷம்மீன் நல்லவள்தான். அவன் கையில் அவள் ஒரு கருவி. அவ்வளவுதான்."

"ஷம்மீன் நல்லவளா இல்லையா என்பது இப்பொழுது பிரச்னையல்ல" என்றாள் விஜயா.

"ஷம்மீனை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது என்பதற்காகச் சொன்னேன். ஒரு பெண் இன்னொரு பெண்ணைப் புரிந்து கொள்ள மறுப்பாள் என்பது இயல்பு என்ற காரணத்தினால், நான் ஷம்மீனை ஆதரித்துப் பேசுவது உனக்குப் பிடிக்கவில்லை என்பதும் எனக்கும் புரிகிறது!"

"அப்படியானால் ரத்தன்லாலையும் புரிந்து கொள்ளுங்களேன். அவன் பிறரை ஏமாற்றித்தான் பிழைக்க வேண்டுமென்று சமூகம் அவனுக்கு விதித்திருப்பதினால் அவன் இப்படி இருக்கிறான், அப்படித்தானே?"

கபூர் ஒன்றும் பேசாமல் அவளையே சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். ஷம்மீனை ஆதரித்து நான் பேசியது இவளுக்குப் பிடிக்கவில்லை. ஷம்மீனுடன் தொடர்ந்து தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்ற என் உள் நினைவுதான் அவளை இப்படி ஆதரித்துப்

# சிக்கனச் சிரிப்பு!



ஸ்காட்டிஷ்காரர்கள் சிக்கனத்துக்குப் பேர் போனவர்கள். அவர்களைப்பற்றி வழங்கும் பல ஜோக்'குகளில் சில. சிரிப்பில் சிக்கனம் வேண்டாம்; தாராளமாகப் படித்துச் சிரியுங்கள்!

தொகுப்பு: கே.வி. முரளி.



- ஒரு மருந்துக் கடையில் கேட்ட உரையாடல்:
  "முதலாளி! ஒருசங்கடமான நிலை."
  "என்ன ஆயிற்று?"
  "ஒரு வாடிக்கையாளருக்கு வாழ்க்கை வெறுத்து விட்டதாம். தற்கொலை செய்து கொள்வதற்காக விஷம் ஒரு பாட்டில் கேட்கிறார். அவரை எப்படிச் சமாளிப்பதென்று தெரியவில்லை."
  "ப்பூ! இவ்வளவுதானா? அவரிடம் நேற்றிலிருந்து விஷம் விலை ஒரு ரூபாய் அதிகமாகி விட்டது என்று சொல் போதும்! போய் விடுவார்!"

- யார் தண்ணீருக்கு அடியில் அதிக நேரம் அமிழ்ந்திருக்கிறார்கள் என்று இரண்டு 'ஸ்காட்டிஷ்காரர்'கள் பந்தயம் வைத்துக் கொண்டு ஓர் ஆற்றில் இறங்கினார்கள்.
  அவர்களுடைய சமாதி அந்த ஆற்றின் அருகிலேயே இருக்கிறது!

இரண்டு 'ஸ்காட்டிஷ்'காரர்கள் சந்தித்துக் கொண்டபோது ஒருவர் கேட்டார்: "என்ன இது, யாருக்கு என்ன 'பிரஸண்ட்' செய்வதானாலும் கறுப்புப் பூனையையே கொடுக்கிறீர்கள்?"

அதற்கு மற்றவர் சொன்னார். "அதுதான் கொடுத்த மறுநாளே நம் வீட்டைத் தேடிக் கண்டுபிடித்து நம்மிடமே வந்து விடுகிறது!"

○ ○ ○

ஒரு சினிமா முடிந்ததும் கௌண்டரில் சென்று ஒரு 'ஸ்காட்டிஷ்'காரர் "டிக்கட் பணத்தில் பாதியைக் கொடு" என்று வேண்டினார்.

காரணம் கேட்டதற்குச் சொன்னார்: "இடைவேளைக்கப்புறம் நன்றாகத் தூங்கி விட்டேன்!"



படம்:



பேச என்னைத் தூண்டியிருக்கிறது. ஷம்மீன் எனக்குத் தேவை. இதை எப்படி இவளுக்குப் புரிய வைப்பது? இந்தத் தொடர்பு என்னை எங்கு கொண்டு போய் விடும்? அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. வாழ்க்கை ஒரு நேர் கோடு இல்லை; தொடர்ந்து நிகழும் நிறுத்துப் புள்ளிகள். ஒவ்வொரு புள்ளியும் என்னைப் பொறுத்தவரையில் சொர்க்கம்! நேர் கோட்டு மாயையில் மயங்கி நிகழ் காலத்தை எதற்காக நரகமாக்கிக் கொள்ள வேண்டும்? சரித்திரம் ஒரு குப்பைத்தொட்டி. எதிர்காலம்கையாலாகாதவர்கள் கட்டிவிட்ட கற்பனை. எனக்கு இரண்டும் தேவையில்லை. என் தேவை ஷம்மீன்... அவளுக்காக ஆயிரம் மோகினிகளைக் கொலை செய்யலாம்.... நானு மோகினியைக் கொலை செய்தேன்? அப்படிச் செய்திருந்தால் 'என் பண்பாட்டுப் பிரக்ஞை என்னைச் சும்மா விடாது' என்று இவளிடம் இப்பொழுது சொன்னேனே, இது உண்மையா? — அல்லது இவள் மதிப்பில் நான் உயர வேண்டும் என்பதற்காக நான் போட்ட வேஷமா? எது உண்மை? எது பொய்?

நேற்றிரவு மோகினியை நான் பார்க்கவில்லை. ஒரு நிழல்தான் தெரிந்தது. நிழல் சிறிது. என்னைத் தாக்க வந்தது. நிழல் பெரிதாகிக் கொண்டே போயிற்று. விசுவரூபமான நிழல். அது என் நிழலா? மோகினியின் நிழலா? — எனக்குப் புரியவில்லை. — நிழல்களுக்கு ஏது அடையாளம்? — உருவம் நிழலாகிவிட்டால்? நிழலைக் கொல்ல வேண்டும். நிழல் உருவத்தின் சரித்திரம். உருவம் சைதன்யத்தின் நிழல். உருவத்தைக் கொல்ல





ஓர் அமெரிக்கருக்குத் தலை வழுக்கையாயிற்று. முடி மறுபடியும் வளருவதற்காக அவர் ஏராளமாகப் பணம் செலவு செய்தார்.

அதே சமயம் ஒரு "ஸ்காட்டிஷ்கார"ருக்குத் தலை வழுக்கையாயிற்று. இவர் உடனே சீப்பை விற்று விட்டார்!

o o o

"அப்பா!"

"என்னடா மகனே?"

"என்னுடைய சட்டையெல்லாம் ரொம்பச் சின்னதாகி இறுக்கிப் பிடிக்கிறது. வேறே சட்டைகள் வாங்க வேண்டும்."

"போடா வேறே வேலை இல்லை! சில நாள் சாப்பிடாமல் பட்டினி கிட. உடம்பு இளைக்கும். சாப்பாட்டுச் செலவும் மிச்சம்; புதுச் சட்டை வாங்க வேண்டிய காசும் மிச்சம்!"

ஹாஸ்டலிலிருந்த மகனுக்குத் தந்தை கடிதம் எழுதினார்:

"உன்னிடமிருந்து ஏன் கடிதமே இல்லை? உடனே ஒரு கடிதம் எழுது. போஸ்டாபீஸில் நான் நிறைய மையும் பேனாவும் வைத்திருக்கிறேனே!"

o o o

ஒரு 'ஸ்காட்டிஷ்' இளைஞன் 'சம்மர்' சீஸனில் தலையை மொட்டை அடித்துக்கொள்ள எண்ணி சலூனுக்குச் சென்று கேட்டான்.

"மொட்டை அடிக்க எவ்வளவு?"

"ஆறு ஷில்லிங் சார்ஜ்."

"ஷேவிங் செய்வதற்கு?"

"மூன்று ஷில்லிங்."

"சரி அப்படியானால் என் தலையை 'ஷேவ்' செய்து விடு!"







கனடாவில் வீடு ஒன்றில் திருட்டு நடந்தது. போலீஸார் அந்த வீட்டிற்கு வந்து, திருடனால் தாக்கப்பட்டுக் கட்டிப் போடப்பட்ட வீட்டின் சொந்தக்காரரிடம் அந்தத் திருடனைப் பற்றிய விவரம் கேட்டார்கள்.

"ஓ! கடவுளே!" என்று தலையில் அடித்துக் கொண்டார் சொந்தக்காரர். "என்னைக் கட்டிப் போட்டுவிட்டு, டெலிவிஷனையும் முடுக்கி விட்டு அவன் திருட ஆரம்பித்தான். நான் டெலிவிஷன் காட்சியிலேயே மூழ்கி அவனைக் கவனிக்காமல் விட்டு விட்டேனே!"

(வீக் எண்ட்) -எம். எஸ்.

---

வேண்டும். சைதன்யம் அழியாதது. சிரஞ்சீவி. என் முன் தெரிந்த நிழலின் கழுத்தைப் பிடிக்கிறேன். உருவமே அழிந்து போ... அழிந்து போ. அப்புறம் என்ன நடந்தது? மோகினியைக் கொன்றுவிட்டேன் என்கிறான் ரத்தன்லால். சைதன்யத்தைக் காப்பாற்ற உருவத்தைக் கொல்வதில் என்ன தப்பு?

"ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் விஜயா.

கபூர் பதில் கூறாமல் எழுந்திருந்து, அவருடைய அலுவலக நாற்காலியருகே சென்று, அவளுக்குப் பின்புறம் காட்டியவாறு, ஜன்னல் வழியே நோக்கினார்.

ஃபோன் ஒலித்தது. விஜயா எடுத்தாள். "கபூரைப் பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள்." மணி சொன்னான்.

"'அப்பாய்ன்ட்மென்டா?'" என்று கேட்டாள் விஜயா.

"இல்லை."

"அப்படியானால் இப்பொழுது அவரைப் பார்க்க முடியாது."

"அவரைக் கேட்டுச் சொல்லுங்களேன்" என்றான் மணி.

"அவரைக் கேட்டுத்தான் சொல்கிறேன்" என்றாள் விஜயா சற்று உஷ்ணமாக.

"இவர் ஒரு முக்கியமான 'க்ளையன்ட்' நீங்கதான் இதுக்குப் பொறுப்பு."

"ஆல்ரைட்... வைச்சுடட்டுமா?"

கபூர் திரும்பியே பார்க்கவில்லை. அவர் தீவிர யோசனையில் ஆழ்ந்திருக்கிறார் என்பது தெரிந்தது.

"எத்தனை நாட்களுக்குத்தான் ஷம்மீனுக்கும், ரத்தன்லாலுக்கும் பணம் கொடுத்துக் கொண்டு இருக்கப் போகிறீர்கள்." என்றாள் விஜயா.

அவர் பதில் சொல்லவில்லை.

"நீங்கள் மோகினியைக் கொன்றிருப்பீர்கள் என்று நான் நம்பவில்லை. அவ்வளவு பெரிய ஓட்டலிலிருந்து 'பாடி'யை அப்புறப் படுத்துவது என்பது சுலபமான காரியமல்ல... மோகினியை நீங்கள்தான் கொன்றீர்கள் என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?"

கபூர் பதில் சொல்லவில்லை.

"அப்படிக் கொலை நடந்திருந்தால், இது வெளியில் வராமலே இருக்காது தயவுசெய்து என்னைப் பார்த்துச் சொல்லுங்கள், நீங்கள் தான் கொன்றீர்களா?"

அவள் அவரெதிரே போய் நின்றுகொண்டு இவ்வாறு கேட்டாள்.

"எஸ்..." அவர் அவளைப் பார்க்காமலேயே பதில் சொன்னார்.

"இதை உங்களால் நிச்சயமாகச் சொல்ல முடியுமா?"

"திரும்பத் திரும்ப எதற்காகக் கேட்கிறாய்?"

"மிஸஸ் கபூர் இறந்திருப்பார் என்று என்னால் நம்ப முடியாது ஷம்மீனும் ரத்தன்லாலும் சேர்ந்து கொண்டு ஏதோ சதி செய்கிறார்கள்."

"அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை."

"ஆனால் எனக்குக் கவலையாக இருக்கிறது."

"எனக்கில்லாத கவலை உனக்கு எதற்கு?"

"நான் உங்கள் வீட்டு மருமகளாக வரப் போகிறவள். நீங்கள்தான் கொலை செய்தீர்கள் என்று நீங்களே நம்பப் பார்க்கிறீர்கள். உங்களை உங்களிடமிருந்து காப்பாற்றும் பொறுப்பு என்னுடையது."

கபூர் புன்னகை செய்தார். "கொலைகாரன் வீட்டுக்கு மருமகளாகப் போவது உனக்குப் பிடிக்கவில்லை. அப்படித்தானே?"

"எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். தயவுசெய்து நடந்ததைச் சொல்லுங்கள்"

கபூர் திரும்பினார். மௌனமாக நாற்காலியில் உட்கார்ந்தார்.

"கொலைகாரன் வீட்டில் புக வேண்டாம் என்று நீ நினைத்தால், ராகேஷைத் திருமணம் செய்து கொள்வதைப் பற்றி மறுபரிசீலனை செய்வதற்கான உரிமை உனக்கு உண்டு"

"இது நானும் ராகேஷும் சேர்ந்து தீர்மானிக்க வேண்டிய விஷயம். மோகினியைக் கொலை செய்ய வேண்டுமென்ற உங்கள் விருப்பத்தை, செய்துவிட்டதாக பாவித்துக் கொள்வது, எந்த விதத்தில் உங்களுக்கு உதவப் போகிறது...?" என்றாள் விஜயா.

"மோகினி நேற்றிரவு அந்த ஹோட்டலுக்கு வந்தாள். அவள் கழுத்தைப் பிடித்து நான் நெரித்தேன். அவள் நேற்றிரவு என்னைக் கண்டு பயப்பட்டது போல் என்றுமே பயந்ததில்லை. அவள் கீழே விழுந்ததும் எனக்குத் தெரியும்."

கபூர் டிராயரைத் திறந்து ஒரு சுருட்டுப் பெட்டியிலிருந்து ஒரு சுருட்டை எடுத்துப் பற்ற வைத்துக்கொண்டார்.

"அதற்கு அப்புறம் உங்களுக்கு எதுவுமே நினைவில்லை. நீங்கள் மயங்கி விழுந்துவிட்டீர்கள். அப்படித்தானே?"

கபூர் பதில் பேசவில்லை.

"மிஸஸ் கபூர் நீங்கள் தாக்கி நிச்சயமாக இறந்திருக்க முடியாது."

"எனக்குக் கொலை செய்வதற்கான சாமர்த்தியம்கூடக் கிடையாது என்கிறாயா?" என்று கேட்டார் கபூர். (தொடரும்)

# ஸ்ரீ ஜய ஹனுமான் வண்ணப்படம்

விற்பனையாகிக் கொண்டிருக்கிறது



கல்கி ஓவியர் வினு வரைந்த பூஜைக்குரிய அழகிய வண்ணப்படம். சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்களின் ஜய மங்கள ஸ்தோத்திரத்தை ஆதாரமாகக் கொண்டு வரையப்பட்டது. எல்லாவற்றுக்கும் மேலாக ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களால் அருளாசி வழங்கப்பெற்றது. விற்பனைக்கு ஏஜெண்டுகள் தேவை

| | | | |
|---|---|---|---|
| 13½" × 20" | ... | விலை ரூ | 4 - 00 |
| 9½" × 15" | ... | விலை ரூ | 2 - 00 |
| 7" × 10" | ... | விலை ரூ | 1 - 00 |

50 பிரதிகளுக்கு அதிகமாக ஆர்டர் தரும் ஏஜெண்டுகளுக்கு 20% கமிஷன் உண்டு. பாக்கிங் உள்பட, பதிவுத் தபால் செலவு ரூ. 3. தேவையான பிரதிகளுக்குரிய ரொக்கத்தை முன்னதாக அனுப்ப வேண்டுகிறோம்.

உரிமையாளர்: ஸரஸ்வதி வெங்கட்ராமன், w/o. ஓவியர் வினு
2, வேலாயுத முதலித் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-600 034

---



குப்பம் IOC டீலரும், இந்து, கல்கி ஏஜெண்டுமான திரு *P. K.* நரசிம்மன் அவர்கள் புதல்வி சௌ. நிருபாவுக்கும் பெங்களூர் *A. G. S.* ஆபீஸ் திரு *K. S.* சேஷாத்திரியின் மூத்த குமாரன் திரு **K. S. மோஹன் குமார் DRE.** அவர்களுக்கும் பெங்களூரில் 10-7-75 அன்று திருமணம் இனிது நடைபெற்றது. திருமணத்துக்கும் வரவேற்புக்கும் நேரில் வருகை தந்தவர்களுக்கும் தபால் மூலம் ஆசி அனுப்பியவர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்

**P. K. நரசிம்மன்**, குப்பம் *(A. P.)*

---



சென்னை, கோபால் சானிட்டரி ஒர்க்ஸ் உரிமையாளர் *M.* கோபால் பிள்ளை அவர்களின் குமாரத்தி செல்வி பத்மாவதிக்கும், செல்வன் A. எல்லப்பனுக்கும், சென்னை, ஸ்ரீ M. மாதவப்பிள்ளை அவர்கள் குமாரன் செல்வன் M. கிருஷ்ணனுக்கும், செல்வி மல்லிகாவுக்கும் சென்னையில் 13-7-75 அன்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு கல்கி அதிபர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும் வந்திருந்து மணமக்களை ஆசிர்வதித்தனர். வாழ்க மணமக்கள்.

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

## "அனாஸின் எனக்குப் பெரிதும் உதவுகிறது" என்கிறார் நர்ஸ் ஏஞ்சலா ஃபெர்னாண்டஸ்.



நர்ஸ் ஏஞ்சலா ஃபெர்னாண்டஸ், ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் எதிர்த்து, விரைவில் வலிகளிலிருந்து நிவாரணமளிக்க சக்தி வாய்ந்தது அனாஸின் என்பதைக் கண்டறிந்தவர்.

**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**

பாதிக்கப் பட்டவர்களிட மிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ சத்துக் குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப்பாற்றலைக் குறைக்கிறது.

**அறிகுறிகள் யாவை?**

உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும். இருமல், தொண்டைப்புண், பசியின்மை, உடல் சோர்வு, தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**

புறக்கணித்தால் நிமோனியாவிலும் சுவாச கோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம், ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள், ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்ய வேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.

**சக்தி வாய்ந்த, நம்பகமான**

# அனாஸின்

**இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி**



A-1-7/74

# 70ல் கல்யாணம்; 40ல் சம்பந்திச் சண்டை!

எனது தந்தை வே. நாராயணன் அவர்கள் 'சில்பஸ்ரீ' பத்திராதிபர் கே. வி. ராமச்சந்திரனுடைய உயிர்த் தோழரா யிருந்தவர். இருவரும் ஆங்கில, தமிழ், வடமொழி இலக்கியங்களில் மாமேதைகள். ''கேசவர்த்தினி'' கூந்தல் தைலம் தயாரித்து வரும் (South India Chemicals) என்ற நிறு வனத்தை நடத்தி வந்த ராமச்சந்திரனும் எனது தந்தையாரும் இலக்கிய ரசனையில் இறங்கி விட்டால் நேரம் போவது தெரி யாது. 'சில்பஸ்ரீ' மாதப் பத்திரிகைகளில் பாதிக்கு மேல் எனது தந்தையின் கை வண்ணமா, மேதாவிலாசமா எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். 'மாயக் கூத்தன்', 'துகளன்', 'கௌசிகன்', 'வம்பன்' என்ற புனைபெயர்களில் கம்ப ரென்ன, வால்மீகி என்ன, கீதை என்ன, குறள் என்ன அனைத்தை யும் பற்றி எழுதினார். இலக் கிய ரசனை ஒன்றுதான் குறிக்கோள். மனத்தில் தோன்றியதைத் தைரிய மாக எழுதுவார். நன்றாக நினைவு இருக்கிறது—எழுத ஆரம்பித்தால் விடியற் காலை மூன்று அல்லது நான்கு மணியானாலும் சளைக்க மாட்டார். சுதேச மித்திரன் வாரப் பத்திரி கையில் வில்லிப்புத்தூர் பாரதத்தை நெடுங் கட்டு ரையாக எழுதி வந்தார். 'பாரத மணி' என்று கா. சி. வேங்கடரமணி தொடங்கிய பத்திரிகையில் ஒவ்வொரு பதிப்பிலும் இரண்டு மூன்று கட்டுரைகளா வது இருக்கும். ஆங்கிலத்தில் கே. ராம கோடீசுவர ராவ் நடத்தி வந்த 'திரிவேணி' மாதப் பத்திரிகையில் அடிக்கடி எழுதி வந் தார். இது தவிர, காமகோடிப் பெரியவர் ஆக்ஞையின்மேல் 'விஷ்ணு சஹஸ்ரநாமம்' 'மூகபஞ்சசதி' மற்றும் சில வடமொழி நூல்களைத் தமிழாக்கம் செய்து ஆசார்ய சேவை புரிந்தார். வையாபுரிப் பிள்ளை அவர்களுக்குத் துணை ஆசிரியராக இருந்து Tamil Lexicon என்ற மாபெரும் அகராதியை உருவாக்கினார். நம்புவீர்களா! வைணிக பாலசந்தரும், அவர் சகோதரர் ராஜம் அவர்களும் நடித்த 'சீதா கல்யாணம்' என்ற முதல் தமிழ்த் திரைப் படத்துக்கு அவர் வசனம் எழுதி யிருந்தார். இன்னும் எவ்வளவோ.



அகிலாண்டேசுவரி

ஜூலை 13ம் தேதி கல்கியில் பொன்னி யின் புதல்வர் அமரர் கல்கி அவர்களுடன் கலை-இலக்கிய சர்ச்சையில் மோதிய இருவரின் பெயர்களும், படங்களும் போட்டிருந்தது. சில்பஸ்ரீ ராமச்சந்திரனுடன் நடந்த பத்தி ரிகை விவாதத்தில் பங்கு கொண்டவரில் என் தந்தையாரும் ஒருவர். ''மாயக் கூத்தன்'' என்ற புனைபெயரில் அவர் பாரதமணி பத்திரிகையில் எழுதியதை இத்துடன் அனுப்பி யிருக்கிறேன்.

அந்த மாயக் கூத்தனின் பேரனுக்கும் கல்கியின் பேத்திக்கும் 1970ல் முடிச்சுப் போட்டுத் திருமணம் நடந்தது! ஆனால் முப்பது ஆண்டுகளுக்கு முன்னரே சில்பஸ்ரீ ராமச்சந்திரன் மூலம் முடிச்சுப் போட்டுச் ''சம்பந்திச் சண்டை'' நிறைவேறியது பற்றி என்ன சொல்ல! இந்த மாயையை யெல் லாம் அகிலாண்டேச்வரிதான் விளக்க வேண்டும். கொள்ளுப் பேத்தி அகிலாவின் இளந் தளிர் நடையில், வண்டுக் கண் களின் அழகில், முத்துப்பல் சிரிப்பில், மழலை யில், அமரர்களான அந்த மாமேதைகளின் மன நிறைவைக் காண்கிறோம்.

சென்னை
23-7-75 பி. என். வேங்கடராமன்

## சாதனைக்கு மேல் சாதனை!

கல்கி 20-7-75 இதழில் ஒருவர் 365 நாட்கள் ஒரே பிளேடை உபயோகித்து முக க்ஷவரம் செய்து கொண்டு உலக ரிகார்ட் ஏற்படுத்தியதாகக் கூறி இருக்கிறீர்கள். ஆனால் நான் ஒரே பிளேடை (7ஓ க்ளாக்) 1971 நவம்பர் முதல் தேதியிலிருந்து இன்று வரை (25-7-75) உபயோகித்து வருகிறேன். இதற்கு என்ன சொல்வீர்கள்?

பெங்களூர்
25-7-75 சி. எம். கங்காதரன்

(அலை இரகங்களுக்கான ரிகார்ட் என்று சொல்வோமா? —ஆர்)

## மேலும் ஒரு சங்கம்!

''பாசிச் சங்கம் முதல் சாவிச் சங்கம் வரை'' என்ற கட்டுரையைப் பார்த்தேன். அந்தத் தொகுப்பில் எங்கள் சங்கத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள். ''மனிதன் முற் பிறப்பில் செய்த பாவத்தின் பயனாக இப் பிறப் பில் கழுதையாகப் பிறந்து சுமை தூக்கும் பிராணியாகிறான். எனவே தற்போது நாம் சுமந்து கொண்டிருக்கும் பாவச் சுமையால் கழுதையோடு ஒன்றுகிறோம். அச் சுமையை இப் பிறவியிலேயே இறக்கி வைக்கும் பொருட்டு நாங்கள் அமைத்த ஒரு சங்கம் ''வெள்ளி மூக்குக் குதிரை சமூகச் சங்கம்.''

கோவை-18
28-7-75 கவிராஜன்

## பெருமையும் கொடுமையும்!

கல்கி: கையில் இருந்தால் பெருமைதான்;
படித்துப் பார்க்க அருமைதான்—ஆனால்
விலையைக் கேட்டால் கொடுமைதான்!

ஈரோடு
26-7-75 எஸ். வி. கங்காதரன்

(இப்படி ஒரு சிலர் வருந்தி எழுதியிருந்தாலும் விலை உயர்வைத் தாங்கள் பொருட்படுத்தவில்லை என்றும் கல்கியின் சிறப்புக்கு அந்த விலையைத் தாராளமாகத் தரலாம் என்றும் பலர் வாழ்த்தியும் எழுதியுள்ளார்கள். கல்கிக்குப் பக்கத் துணையாக உறுதியுடன் நிற்கும் நேயர்கள் அனைவருக்கும் இதயங்கனிந்த நன்றி. - ஆர்.)

# அமெரிக்கத் துக்கடா!



அமெரிக்க சுதந்திரத்தின் இருநூறாவது ஆண்டு இது. அதனைக் கொண்டாடும் விதமாக டிஸ்னிலாந்தில் விசேஷ ஊர்வலம் நாள்தோறும் நடக்கும். ஊர்வலத்துக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்வது வால்ட் டிஸ்னியின் சிருஷ்டிகளான மிக்கி மவுஸ், கூஃபி, டொனுல்ட் டக்!

ஆங்கில மன்னர் மூன்றும் ஜார்ஜ்-இன் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுச் சுதந்திரம் தேடிக் கொண்ட அமெரிக்காவின் அரசியல் சாஸனம் 1789-ல் அமுலாக்கப்பட்டதும் முதல் ஜனாதிபதியாக ஜார்ஜ் வாஷிங்டன் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரது பதவி ஏற்பு வைபவத்தின்போது, நிலவியிருந்த நிசப்தத்தைக் கலைத்துக் கொண்டு ஒரு விருந்தாளி சொன்னது: "மூன்றும் ஜார்ஜ் போனுர், முதலாம் ஜார்ஜ் வந்தார்!"

* * *

அமெரிக்கா சுதந்திரம் அடைந்தவுடன் வெள்ளை அமெரிக்க ஆண் மக்களுக்கு மட்டுமே வோட்டுரிமை இருந்தது. 1870-ம் ஆண்டு நீக்ரோக்களுக்கும் அந்த வோட்டுரிமை கிடைத்தது. முதல் உலகப் போருக்குப் பின்னுல் பெண்களுக்கும் ஓட்டுரிமை தரப்பட்டது. 1971-ல் 18 வயதானவர்கள் அனைவரும் வோட்டுரிமை பெற்றனர்.

"18 வயதானுல் போரில் கலந்துகொள்ளக் கடமையுண்டு. ஆனுல் வாக்கெடுப்பில் கலந்துகொள்ள உரிமை கிடையாதா?" என்ற கேள்வியை வியட்நாம் போரில் பணி புரியச் சென்ற இளைஞர்கள் கேட்டதன் விளைவு இது.

* * *

அமெரிக்காவின் ஜனாதிபதிக்கு வருடாந்திரச் சம்பளம் சுமார் 15 லட்ச ரூபாய். உபஜனாதிபதிக்கும் சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதிக்கும் சுமார் 4·7 லட்ச ரூபாய். காபினெட் மந்திரிகளுக்கும் இதர சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளுக்கும் 4·5 லட்சம் ரூபாய்.

ஜனாதிபதியைக் காட்டிலும் மிக அதிகமான சம்பளம் தரும் பதவிகள் பல அமெரிக்காவில் உள்ளன. மிக அதிகப்படியான சம்பளம் வாங்குபவர்கள் யார் தெரியுமா? வருடத்துக்குச் சுமார் 50 லட்சம் கார்கள் தயாரிக்கும் ஜெனரல் மோட்டார் கம்பெனியின் தலைமையதிகாரியும், சுமார் 25 லட்சம் கார்கள் தயாரிக்கும் ஃபோர்டு மோட்டார் கம்பெனியின் தலைமையதிகாரியும்தாம். இவர்கள் வாங்கும் வருடாந்திரச் சம்பளம் சுமார் 66 லட்ச ரூபாய்.

* * *

வேலை வாய்ப்பு விளம்பரங்களில் ஆண் பெண் என்ற பாகுபாடு கூடாது. இருபாலாரும் சமமாகவே கருதப்படவேண்டும் என்ற சட்டம் அமெரிக்காவில் கொண்டு வரப்பட்டதன் விளைவாக, இப்படியும் சில விளம்பரங்கள் வெளிவந்தன:

"ஷேவிங் பிளேடு விளம்பரக் கம்பெனியில் வேலைக்கு ஒருவர் (ஆணே பெண்ணே) தேவை. அடர்த்தியான தாடி உள்ளவர்கள் மட்டுமே விண்ணப்பிக்கவும்."

"கர்ப்பமுற்ருேர் அணிந்துகொள்ளும் உடைகளை உடுத்திக்காட்ட மாடல்கள் தேவை. ஆணே பெண்ணே பரவாயில்லை. விண்ணப்பம் செய்பவர்கள் கர்ப்பமுற்றவர்களாக இருக்க வேண்டியது அவசியம்."

—எஸ். பி. கிருஷ்ணமூர்த்தி



# சேமிப்பதற்கு யூகோ பாங்க் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

நீங்கள் எங்கு இருந்தாலும் அங்கே உங்களருகில் ஒரு வசதியான யூகோபாங்க் உள்ளது. சேமிப்பை எளிதாக்குவதற்காகவே. உங்களை வரவேற்கவும், உங்கள் சேமிப்பை வளரச் செய்யவும் நாடு முழுவதும் எங்கள் கிளைகள் பரந்து இருக்கின்றன.

விவரங்களுக்கு உங்கள் அருகில்
உள்ள யூகோ பாங்க் கிளையை
அணுகவும்



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

UCOC-50A TAM



# இரண்டில் ஒன்று

டி.கே.டி. துரைராசன்

ருக்மிணி.

அவளுக்கு ஓர் ஆசை. இன்று நேற்றல்ல — இந்த ஒரு மாதமாக.

வீட்டு வாசற்படியை விட்டு இறங்கிப் பத்தடி தூரம்கூட நடக்கக் கூடாது. ஒரு டாக்ஸியில் ஏறிக் கொண்டு நேரே ஹோட்டல் முன்னால் போய் இறங்க வேண்டும். மத்தியானச் சாப்பாடு வயிறாரச் சாப்பிட வேண்டும். பிறகு ஒரு மாட்னி ஷோ. படம் பார்த்துவிட்டு மறுபடியும் ஹோட்டலில் டிபன், ஸ்வீட்டோடு. அது முடிந்து நேரே வீட்டுக்கு வந்து விடக் கூடாது; பீச்சுக்குப் போய் இரவு ஏழரை — எட்டு மணி வரையில் இருந்து விட்டு, வீட்டுக்குத் திரும்பும்போது சேட் கடையில் பூரி சப்பாத்தி.

"எவ்வளவு செலவாகும்?"

மிஞ்சி மிஞ்சிப் போனால் இரண்டு பேருக்கும் சேர்த்து இருபத்தைந்து —முப்பது ரூபாய்க்கு மேல் போகாது.

பெட்டியைத் திறந்து எவ்வளவு பணம் இருக்கிறது என்று பார்த்தாள். ஐம்பது ரூபாய். கடைசி வாரம். முப்பது ரூபாய் செலவானாலும் மீதிப் பணத்தை வைத்து முதல் தேதி வரையில் சமாளித்துவிடலாம்.

திடீரென்று அவளுக்கு ஒரு சந்தேகம். 'அவர் என்ன சொல்வாரோ !'

சிதம்பரம் ஒன்றும் சொல்லமாட்டான். வாங்குகிற சம்பளத்தைப் பைசா சுத்தமாக அவளிடம் கொடுத்து விடுவதோடு அவன் வேலை முடிந்தது. மற்றதெல்லாம் அவள் பாடு.

அன்று சனிக்கிழமை. சிதம்பரம் வழக்கம் போல் சற்று முன்னதாகவே வீடு திரும்பிவிட்டான். ஒவ்வொரு சனிக்கிழமையும் அவர்கள் கடற்கரைக்குச் சென்று வருவார்கள். செலவில்லாத வேலை.

"பீச்சுக்குப் புறப்படலாமா?" என்று கேட்டான் சிதம்பரம் — முகம் கைகால் கழுவித் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டு.

"இன்றைக்கு வேணாங்க.... ஒரேயடியா நாளைக்குப் போகலாம்....."

"ஒரேயடியான்னா.....?"

ருக்மிணி தன் ஆசையைச் சொன்னாள். அப்படிச் சொன்னபொழுது கணவன் என்ன சொல்வானோ என்ற பயம்.

ஆனால் அவள் பயந்தபடி எதுவும் இல்லை.

"அப்படியா ? வெரிகுட். நாளைக்கே போகலாம்...." என்றான் சிதம்பரம். பிறகு "என்ன திடீர்னு உனக்கு இப்படியோர் ஆசை ?" என்று கேட்டான்.

"என்னமோ.... மனசிலே தோணிச்சி... அக்கம் பக்கத்து வீட்டுக்காரங்க எல்லாம் எவ்வளவு செலவு பண்றாங்க..... எங்கெங்கே போயிட்டு வராங்க.... நாம ஒரு நாளாவது போவோமே....." என்று சொன்னவள், "நிச்சயமா உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லையே...?" என்று கேட்டாள்.

"பைத்தியம்.... ஒரு நாளென்ன — தினமும் உன்னை அப்பிடிக் கூட்டிக்கிட்டுப் போகணும்னு ஆசைதான். ஆனால் செலவுக்குப் பயந்துக்கிட்டு நீ வரமாட்டியோன்னு நெனைச்சிப்பேன்..... இப்ப நீயே போகலாம் என்று சொல்லிட்டே.... நாளைக்குப் பன்னிரண்டு மணிக்கெல்லாம் புறப்படலாம்."

அன்று இரவெல்லாம் ருக்மிணிக்குத் தூக்கமே இல்லை.

மறு நாள் அவளுக்கு மிகவும் சந்தோஷமாக இருக்கும்.

அவளைப் பொறுத்தமட்டில் அது பெரிய சந்தோஷம்தான். கல்யாணமாகி இரண்டு வருஷங்கள். குழந்தை குட்டியோ — கடன் சுமையோ இல்லையென்றாலும், அவள் அப்படித் தாராளமாகச் செலவு செய்ததில்லை.

காரணம் — புருஷனுக்குத் திட்டமான வருமானம் என்பது மட்டுமல்ல; அந்த வருமானத்தைக் கொண்டு திட்டமாக வாழ வேண்டும் என்ற ருக்மிணியின் எண்ணமும் தான். தேவைக்கு மீறி ஒரு பைசா அதிகமாகச் செலவு செய்ததில்லை. பிறரிடம் ஐந்து பத்து என்று கடன் வாங்கியதில்லை.

இப்படிக் கையடக்கமாகச் செலவு செய்தவளுக்கு — ஒருநாள் மனம் போலச் செலவு செய்யப் போகிறோம் என்றால் அது மகிழ்ச்சி தானே !

மறு நாள் ஞாயிறு.

"இன்னுமா அலங்காரம் முடியலே...புறப்படு..." என்று துரிதப்படுத்தினான் சிதம்பரம். "மணி பன்னிரண்டு ஆகப் போகுது..... ஹோட்டலில் போய்ச் சாப்பிட்டுவிட்டுச் சினிமாவுக்குப் போகச் சரியாக இருக்கும்."

"இதோ.... இதோ..." என்று சொல்லியவாறு கடைசியாக ஒரு முறை கண்ணாடியைப் பார்த்துக் கொண்டு கிளம்பினாள் ருக்மிணி.

"பொறு.... பொறு...." என்று அவளை ஒரு நிமிஷம் ஏற இறங்கப் பார்த்தான் சிதம்பரம்.

"என்ன பார்க்கிறீங்க....?"



''ரொம்ப அழகா இருக்கே!'' என்றான் சிதம்பரம் பெருமிதத்தோடு.

''சரி... சரி.... வாங்க....'' என்று நாணத்தோடு அவள் வெளியில் வந்தாள்.

இருவரும் டாக்ஸி ஸ்டாண்டை நோக்கி நடந்தார்கள்.

''என்னங்க... மவுண்ட்ரோடுக்கு டாக்ஸியிலே போறதுன்னு எவ்வளவு ஆகும்?''

''நாலஞ்சு ரூபா ஆகும்.''

''ஆட்டோ ரிக்ஷாவிலே போனா?''

''அதுவும் மூணு ரூபாய்க்கு வரும்.''

''ஆட்டோ ரிக்ஷாவிலேயே போய்விடலாமா?''

''தாராளமாகப் போகலாம். ஆனால் நீதானே டாக்ஸியிலே போகணும்னு ஆசைப்பட்டே!''

டாக்ஸி ஸ்டாண்டுக்கு அருகில் இரண்டு மூன்று ஆட்டோக்களும் நின்று கொண்டிருந்தன..... ''ஆட்டோ....'' என்று குரல் கொடுக்கப் போனான் சிதம்பரம்.

''கொஞ்சம் பொறுங்களேன்'' என்றாள் ருக்மிணி. ''மணி பன்னிரண்டுதான் ஆகுது. நாலணா கொடுத்துப் பஸ்ஸிலே போனா அரை மணி நேரத்திலே போயிட முடியாது? இதுக்குப் போயி மூணு ரூபா — நாலு ரூபாய்ன்னு செலவு பண்ணிக்கிட்டு.... அந்தப் பணம் இருந்தா ஒரு கிலோ சர்க்கரை வாங்கலாம்.''

சிதம்பரம் கைக் கடிகாரத்தைப் பார்த்தான்.

மணி 12.15.

''பஸ் கிடைக்கப் போறதுக்கு லேட்டானா?''

''ஒண்ணும் ஆகாது.... இதோ இருக்கு பஸ் ஸ்டாண்டு....'' என்று முன்னால் நடந்தாள் ருக்மிணி.

'இதோ இருக்கு பஸ் ஸ்டாண்டு' என்று ருக்மிணி சொல்லிவிட்டாளே தவிர, குறைந்த பட்சம் இரண்டு பர்லாங்கு தூரம் நடக்க வேண்டும்.

அவர்கள் பஸ் ஸ்டாண்டுக்கு வந்து சேருவதற்குப் பதினைந்து நிமிஷங்களுக்கு மேல் ஆகிவிட்டது. முக்கால் மணி நேரமாகப் பஸ்ஸே வரவில்லையாம்,

வேகாத வெயில். அதோடு இந்தக் கூட்டத்தில் பஸ் ஏறி, மவுண்ட் ரோடு போய்ச் சேருவதற்குள், 'போதும்.... போதும்' என்றாகிவிடும்.

மேலும் ஒரு பதினைந்து நிமிஷங்கள் கழித்து ஒரு வகையாகப் பஸ் வந்து சேர்ந்தது— புழுக்கள் மாதிரி பிரயாணிகள் ஒட்டிக் கொண்டு வந்தார்கள்.

''ஏறுவதா? வேண்டாமா?'' என்று சிதம்பரம் யோசித்துக் கொண்டிருந்தபோது—



பத்திரிகை ஆசிரியருக்கு ஒரே கோபம். "கூப்பிடய்யா அந்த சினிமா எடிட்டரை!" என்று கூச்சல் போட்டார். அவர் வந்ததும் கோபம் தணியாமலே, "என் சுவாமி! உங்களுக்கெல்லாம் நேற்று நடிகர் வணங்காமுடி டிரிங்க்ஸ் பார்ட்டி கொடுத்தாராமே? ஏன்? டிரிங்க்ஸ் பார்ட்டி தந்தால்தான் சினிமா எடிட்டருங்களெல்லாம் வருவீங்களோ?" என்று கேட்டார்.

"சேச்சே! அப்படி இல்லே ஸார்" என்றார் சினிமா ஆசிரியர். "டிரிங்க்ஸ் பார்ட்டி என்றால்தான் நடிகர் வணங்காமுடி வருவார்!"

ooooooooooooooooooooooooooooooo

"மரம் மாதிரி நிக்கிறீங்களே, ஏறுங்களேன்!" என்று அவனை முன்னுக்குத் தள்ளினாள் ருக்மிணி.

வேறு வழியில்லை.

ஒரு வகையாக ருக்மிணியை ஏற்றிவிட்டு, தானும் தொற்றிக் கொண்டான் சிதம்பரம்.

மவுண்ட்ரோடில் வந்து இறங்கியபொழுது — அவர்கள் அவர்களாக இல்லை. கூட்ட நெரிசலில் ருக்மிணியின் புடவையெல்லாம் கசங்கி, அவளைப் பார்க்க 'ஐயோ பாவம்' என்றிருந்தது.

"வா, வா... மணி ஒன்னே கால் ஆயிப் போச்சி... சீக்கிரம் சாப்பிட்டுட்டு சினிமாவுக்கு வருவோம்."

"எந்த ஹோட்டலுக்குப் போகலாம்?"

"ஏதாவதொரு ஹோட்டல்" என்று பிளாட்பாரத்துக்கு விரைந்தான் சிதம்பரம்.

அங்கே ஒரு ஹோட்டல். பெரிய ஹோட்டல்தான். பார்ப்பதற்கு மிகவும் ஆடம்பரமாக இருந்தது. அதனுள் நுழையச் சிதம்பரம் காலடி எடுத்து வைத்ததும்—

அவன் கையைப் பற்றினாள் ருக்மிணி.

"என்னங்க... பார்க்கறதுக்குப் பெரிய ஹோட்டலாக இருக்கே... சாப்பாடு எவ்வளவு இருக்கும்?"

"ஒரு சாப்பாடு ஆறு ரூபா... முந்தியொரு தடவை சாப்பிட்டிருக்கேன்."

"அம்மாடியோவ்...ஆறு ரூபாயா? அளவுச் சாப்பாடு?" என்று திகைப்புடன் கேட்டாள் ருக்மிணி.

"அளவுச் சாப்பாடெல்லாம் கிடையாது."

ருக்மிணி ஒரு விநாடி யோசித்தாள்.

"என்னங்க .... பக்கத்திலே ஏதாவது சின்ன ஹோட்டல் இருக்குதா?"

"இருக்கு... ஏன்?"

"நீங்க இங்கே சாப்பிடுங்க. நான் அந்த ஹோட்டல்லே டிபன் சாப்பிட்டுட்டு வந்து வெளியே நிக்கிறேன்."

"என்ன ருக்மிணி இது..."

"இல்லீங்க. மனசார ஆறு ரூபா குடுத்து ஒரு வேளைக்கு எப்படிங்க சாப்பிடறது? அந்தப் பணம் இருந்தா ஒரு வாரத்துக்குக் கெரஸினுயில் வாங்கிக்கலாம்."

சிதம்பரத்துக்குத் நலேகற்றுவது போல் இருந்தது. பசி மயக்கம் வேறு.

"தினமுமா சாப்பிடப் போறோம்? என்னிக்காவது ஒரு நாளைக்குத்தானே... நீதானே நல்ல ஹோட்டல்லே சாப்பிடணும்னு சொன்னே?"

"சொன்னேன்தான். ஆறு ஆறு ரூபான்னு சொன்னதும் பசியெல்லாம் போயிடிச்சி. நீங்க மட்டும் அங்கே சாப்பிடுங்க."

"உனக்கு இல்லாதப்ப எனக்கு எதுக்கு? வா, ரெண்டு பேரும் டிபனே சாப்பிடலாம்."

ருக்மிணிக்கு அந்த டிபனை வாயில் வைக்க முடியவில்லை. இட்டிலி தோசை என்று எது வாங்கினாலும் காய்ந்து போய் 'வறவற' என்று இருந்தது.

ஆனால் சிதம்பரம்?

அவனுக்கு எதைப் பற்றியும் கவலை இல்லை. வயிறு நிரம்பினால் சரி. வஞ்சகமில்லாமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் ருக்மிணி. இப்போது என்ன காரணத்துக்காகவோ அவள் கண்களில் கண்ணீர் திரண்டது. சிதம்பரம் இதைக் கவனித்துவிட்டான்.

"என்ன ருக்மிணி... ஏன் கண் கலங்கியிருக்கு?" என்று துடிப்போடு கேட்டான்.

"ஒண்ணுமில்லே. ஏதோ தூசி விழுந்திரிச்சி..." என்று கூறியவள் பேச்சைத் திசை திருப்புவதற்காக, "இங்கே ஐஸ்கிரீம் இருக்குமில்லே?" என்று கேட்டாள்.

"ஓ...இருக்குமே... சாப்பிடறியா?"

"எவ்வளவு சொல்வாங்க?"

சிதம்பரம் விலைப் பட்டியலைப் பார்த்தான்: ஒரு ரூபாய் ஐம்பது பைசா.

"ஐஸ்லே கொஞ்சம் சர்க்கரையைப் போட்டுக் குடுக்கிறதுக்கு இவ்வளவு பணமா? அநியாயமா இருக்கே" என்று திகைத்தாள் ருக்மிணி.

"பின்னே என்ன? ஹோட்டல்னா அப்படித்தான். கொண்டாரச் சொல்லட்டுமா?" என்று சர்வரை அழைத்தான் சிதம்பரம்.

"வேணும், வேணும். அந்தப் பணம் இருந்தா ரெண்டு மூணு நாளைக்குக் காய்கறி வாங்கிக்கலாம். காப்பி கொண்டாரச் சொல்லுங்க."

சினிமாத் தியேட்டரில் கூட்டம் நிரம்பி வழிந்தது.

உயர் வகுப்பு டிக்கட் ரூபாய் நாலு பத்து தான் இருந்தது. மற்றதெல்லாம் விற்றுவிட்டது.

ருக்மிணிக்கு ஏமாற்றம். அந்தப் படத்தைப் பார்க்க வேண்டும் என்று ஆசை. அவளுக்குப் பிடித்தமான நடிகை நடித்த படம். பானர்களையே பார்த்துக் கொண்டிருந்தாள் ருக்மிணி.

''டயமாச்சி ருக்மிணி. நாலு பத்துக்கூட தீர்ந்து போகும். சீக்கிரம் பணம் குடு.''

ருக்மிணி தன் பர்ஸைத் திறந்து பணம் எடுக்கப் போனாள். திடீரென்று ஒரு யோசனை! இரண்டு டிக்கெட்டுக்கு எட்டேகால் ரூபாய். இவ்வளவு பணம் கொடுத்து சினிமா பார்க்க வேண்டுமா? இந்தப் பணம் இருந்தா இரண்டு படி அரிசி வாங்கலாமே!

''என்ன ருக்மிணி... இன்னும் யோசனை பண்ணிக்கிட்டிருக்கே?''

''குறைஞ்ச டிக்கட் எதாச்சும் கிடைக்குமான்னு பாருங்களேன்.''

''அதெல்லாம்தான் வித்தாச்சே?''

''எட்டே கால் ரூபாய் கொடுத்தா சினிமா பார்க்கறது?''

''அப்ப வேறே படத்துக்குப் போவோம்'' என்றான் சிதம்பரம்.

''எனக்கென்னவோ இந்தப் படம் பார்க்கணும்னு ஆசையா இருக்கு.''

''அப்ப பணம் குடு.''

கொடுக்கலாமா வேண்டாமா என்று சில விநாடிகள் தயங்கிய ருக்மிணி திடீரென்று ''வேணாங்க... இன்னொரு நாளைக்குப் பார்த்துக்கலாம்'' என்று திரும்பினாள்.

''அப்படின்னா இப்ப என்ன பண்ணறது?''

''வீட்டுக்குப் போகலாம். சாப்பாடு ஆக்கி வச்சிட்டு சாயந்திரமா பீச்சுக்குப்போவோம்'' என்று சொன்னபோது ருக்மிணியின் குரலில் உயிரே இல்லை.

அந்தி மயங்கி இருட்டிக் கொண்டு வந்தது. அயர்ந்து படுத்துவிட்ட சிதம்பரம் இன்னும் எழுந்திருக்கவில்லை. சமையல் வேலையை முடித்துவிட்ட ருக்மிணி, சுவரில் சாய்ந்து அமர்ந்தபடி எதையோ யோசித்துக்கொண்டிருந்தாள். சாயந்திரம் கடற்கரைக்குப் போகவேண்டும் என்று தன் கணவனிடம் சொன்னதுகூட அவளுக்கு நினைவில்லை.

திடீரென்று தூக்கம் கலைந்து கண் திறந்தான் சிதம்பரம். அவன் பார்வையில் முதலில் பட்டது ருக்மிணியின் தோற்றம் தான்.

''என்ன ருக்மிணி, ஒரு மாதிரியா இருக்கிறே?'' என்று கேட்டபடி எழுந்து அவள் அருகில் வந்து அமர்ந்தான் சிதம்பரம்.

''ஒண்ணுமில்லீங்க. வெயில்லே அலைஞ்சிட்டு வந்தது அசதியா யிருக்கு'' என்று சொன்னபோது ருக்மிணியின் குரல் அழுகையில் கரைவதைச் சிதம்பரம் கவனித்து விட்டான்.

''ஏன் அழுறே?''

அவ்வளவுதான்.

அவன் மடியில் முகம் புதைத்துக்கொண்டு ஒரு குழந்தை போல் விம்மத் தொடங்கினாள் ருக்மிணி. சிதம்பரம் திகைத்துப் போனான்.

''என்ன ஆச்சு ருக்மிணி... என்ன ஆச்சு?'' என்று அவளை அள்ளிஅணைத்தபடி கேட்டான்.

''வேறே ஒண்ணுமில்லே.... மனசாரச் செலவு பண்ணிச் சந்தோஷமா இருக்கிறதுக்கு நமக்கு அதிர்ஷ்டம் இல்லே பார்த்தீங்களா?'' என்று ருக்மிணி விம்மலோடு சொன்னதும் சிதம்பரத்துக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

''பைத்தியம்... இதுக்கா அழுறே... இதுக்குத் தேவையானது அதிர்ஷ்டமில்லே. மனசு. டாக்ஸியிலே போகணும். ஹோட்டல்லே ஸ்வீட் சாப்பிடணும். சினிமாவுக்குப் போகணும்னு ஆசைப்பட்டே இல்லியா? அப்படி ஆசைப்படற மனசு மட்டும் இருந்திருக்கணும். ஆனா நீயோ ஒவ்வொண்ணுத்துக்கும் கணக்குப் பார்த்தே. அதனாலே ஆசை நிறைவேறலே. இப்ப அதிர்ஷ்டமில்லேன்னு சொல்லி அழுறே. ஒண்ணு ஆசைப்படற மனசு மட்டும் இருக்கணும், இல்லே கணக்குப் பார்க்கிற புத்தி மட்டும் இருக்கணும். ரெண்டிலே ஒண்ணுதான் இருக்கணும். ரெண்டும் இருந்தா இப்படித் தான்....'' என்று ஒரு ஞானியைப் போல் அவன் பேசிக் கொண்டு போவதை ஏற்றுக் கொள்ளாதவள் போல்—

ருக்மிணி விம்மிக் கொண்டிருந்தாள்.

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்**
**பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள்**

1. ஆண்டாளு — ம. யாமன் (கூத்துவன்)
2. இன்று நான் புதிய மனிதன் — என். எம். தனராஜ்
3. ஓய்வு — வி. கமலா ராவ்
4. மனிதாபிமானம் வென்றது — கே. ராமகிருஷ்ணன்
5. ஒரு நாள் வேலை — பி. இ. செல்லப்பா
6. மன்னித்துவிடு, சாரு! — டி. நமசிவாயம்
7. வேலிக்கு வெளியே — ர. வைத்தியநாதன் (ரவை)
8. அந்த ஆர்க்காட்டுச் சாலையிலே — டி. முத்துசாமி (துரோணன்)
9. மாதவி — நாக சுப்பிரமணியம் (தஞ்சை மணியன்)
10. புது முகம் — டி. லக்ஷ்மி நரசிம்மன் (விநோதானந்த்)
11. ஒடிப்போனவள் — வி. கௌரி
12 மனைவியின் கண்ணீர் — பி. கிருஷ்ணமூர்த்தி
13. ஓராயிரம் இவர்கள்—ஜி. எஸ். பாலகிருஷ்ணன்
14. அறிவு விழித்தது — வி. லக்ஷ்மி நரசிம்மன்
15. வேரில் பழுத்த பலா — கே. கே. ராஜன்
16. தெருவில் ஒரு விளக்கு — ஐ. மெல்கியோ (அமுதவன்)
17. உருவெளி — கே. சின்னக் குஞ்சு (காடவன்)
18. பகைமைப் புரட்சி — பி. செல்லத்துரை (இளவேனில்)
19. பரோபகாரி வைத்தா — சிவ. அரிகரன்
20. மரணமற்று... — எம். சுப்பிரமணியம்
21. இராமன் இருக்குமிடம் — எஸ். லக்ஷ்மி சுப்பிரமணியம்
22. வாழ்க்கையின் அர்த்தம் புரிகிறது — அங்கதன்
23. ஊன்றுகோல் — நாகை. பி. ஜீவா

# அதோ எங்கள் மூதாதையர்!

எங்கள் மூதாதையர்கள்—

அவர்கள் என்றும் எங்கள் நன்றிக்குரியவர்கள்.

குதிரைகளின் காலடிகளில் சிக்கிக் குருதி கொட்டிய அவர்கள், அந்தக் குருதியிலே ஒரு கொடியை நாட்டிவிட்டுப் போனார்கள்.

துப்பாக்கிக் குண்டுகளால் துளைக்கப்பட்ட அவர்கள் நெஞ்சிலிருந்து பீறிட்ட ரத்தம், 'சுதந்திரம்' என்ற எழுத்துக்களை எழுதி விட்டுப் போயிற்று.

தடியடிபட்டு அவர்கள் கதறிய கதறலே எங்கள் தேசிய கீதமாயிற்று.

அவர்களது புதைகுழி மேட்டிலேதான், எங்களது புதிய காலங்கள் உருவாக்கப் பட்டன.

முப்பது ஆண்டுகளுக்கு முந்திய இந்தியனுக்கும், இன்றைய இந்தியனுக்குமிடையே வேறுபாடுகள் மிக அதிகம்.

இடையில் நடந்த அதிசயம் என்ன?

அதன் பெயரே சுதந்திரம்.

கொடிய சிறைச்சாலைகளிலேதான் எதிர் கால இந்தியாவின் தலைவிதி நிர்ணயிக்கப் பட்டது.

கள்ளிக் காடுகளில் புஷ்பங்களை உருவாக்க அவர்கள் அங்கேதான் திட்டம் தீட்டினார்கள்.

மகாராஜாக்களும், பிச்சைக்காரர்களும், பாம்புகளும் மண்டிய ஒரு நாட்டை விஞ்ஞானிகளும், மருத்துவர்களும், தொழிற்சாலைகளும் நிரம்பிய நாடாக்க அவர்கள் படாத பாடு பட்டார்கள்.

மேகத்தை முட்டும் ஆலைகளின் கரிய புகை, அவர்களது பெயரையே பாடுகிறது.

எரியும் மின்சார விளக்கின் ஒளியிலே, அவர்கள் முகங்களே தெரிகின்றன.

கல்லூரிகளும், பள்ளிகளும் அவர்களையே கவிதைகளாக வடிக்கின்றன.

காலனி ஆதிக்கத்தின் சமாதிக்கு, முதல் கல்லை எடுத்துப் போட்டது இந்தியா.

உலகெங்கும் இருந்த அடிமைகளுக்கு ஒளி விளக்கை ஏற்றிக் கொடுத்தது இந்தியா.

எங்கள் மூதாதையர்களின் பரிசுத்த ஆவிகள், எத்தனை நாடுகளின் விடுதலைக்குக் காரணமாக இருந்திருக்கின்றன!

வாராது போல் வந்த மாமணிகள் தாராது போலத் தந்த தர்மம் இது.

தத்துவங்களின் தாயகத்தை, சத்தியத்தின் திருக்கோயிலை அவர்கள் புதிதாக நிர்மாணித்துக் காட்டினார்கள்.

அதிலே பதிக்கப்பட்டிருக்கும் முத்துக்கள் அவர்களது கண்ணீர்த் துளிகளின் பிரதிபிம்பங்கள்.

மகுடத்தின்மீது ஊஞ்சலாடிக் கொண்டிருக்கும் குஞ்சம், அவர்களது நரம்புகளால் உருவாக்கப்பட்டது.

அவர்கள் மாடு மேய்ப்பவர்களையும் மந்திரியாக்கிப் பார்த்தார்கள்.

அந்த மங்கலச் சின்னங்கள் அணையும் விளக்குகள் அல்ல. இப்போது அவர்களின் காலடிச் சுவடுகளை எண்ணிப் பாருங்கள். குனிந்து அந்தச் சுவடுகளுக்கு முத்தம் கொடுங்கள்.

உங்களுக்காகக் கண்ணீர் விட்ட அவர்களின் சமாதிகளின் மீது, ஒப்புக்காகவேனும் இரண்டு சொட்டுக் கண்ணீர் விடுங்கள்.

அடிமை எப்படி இருப்பான் என்று உங்களுக்கும் எனக்கும் தெரியாது: அதை அவர்கள் மட்டுமே பார்த்தார்கள்.

அந்த அனுபவங்கள் நாம் அவர்களை ஞானத் துறவிகளாக்கின.

மாளிகையை அனுபவிக்கிறவனுக்குக் கட்டியவனுடைய கஷ்டம் தெரியாது.

நாம் விவரம் தெரியாத குழந்தைகளாகவே வளர்க்கப்பட்டு விட்டோம்.

தெய்வ நம்பிக்கையும், தேசப் பற்றுமே நம்மை உருவாக்கின; ஆனால் அவற்றை மட்டுமே நாம் மறந்து விட்டோம்.

தர்மம் என்றால் என்ன என்பது நமக்குத் தெரியாமலே போய் விட்டது!

மற்றொரு முறை நாம் அடிமைகளானால் ஒழிய, சுதந்திரத்தின் பெருமை நமக்குப் புரியாது.

கடந்த காலங்களை நினைத்துப் பார்க்கத் திராணியற்ற கூட்டத்தை, மீண்டும் அதே போன்ற ஒரு காலத்துக்கு அழைத்துச் சென்றால் தான், அது தம் மூதாதையர்களின் தியாகத்தைப் புரிந்து கொள்ளும்.

அந்த அனுபவம் வராமல் இருப்பதற்கு, நமது சிந்தனைக் கதவுகள் திறக்கட்டும்.

ஆலயத்துக்குள் நுழையும் போது, அதன் படிக்கட்டுக்களைத் தொட்டு வணங்காத நமது பாவக்கரங்கள், இப்போதாவது தொட்டு வணங்கட்டும்.

பறந்து கொண்டிருக்கும் தேசியக் கொடியில் அசோகச் சக்கரம் சுழன்று கொண்டிருக்கிறது. அந்தச்சக்கரத்தை அந்தக் கொடியில் பொறித்தவர்கள் யார்?

அவர்களைத் தெரியாதவர்கள் இந்தச் சுதந்திர தினத்தைக் கொண்டாட வேண்டாம்.

மனிதர்களுக்காகவே திருவிழா; சடலங்களுக்காக அல்ல.




Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)